


# பத்ராசலம் இராமதாசர்

பி. ரஜனிகாந்த ராவ்



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

*உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்தரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.*

*(நாகார்ஜுன மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு படஉதவி: நேஷனல் மியூசியம், புது தில்லி)*

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# பத்ராசலம் இராமதாசர்


ஆசிரியர்

பி. ரஜனிகாந்த ராவ்

தமிழாக்கம்

இர. ஆலாலசுந்தரம்





சாகித்திய அக்காதெமி

**Bhadrachalam Ramadasar** - Tamil Translation by *Ira. Alalasundaram of B. Rajanikantha Rao's Monograph in English. Sahitya Akademi, New Delhi,* 2000, Rs. 25


முதல் வெளியீடு - 2000
ISBN 81 - 260 - 0826 - 1

***சாகித்திய அக்காதெமி***
தலைமை அலுவலகம்,
ரவீந்திர பவன், 35 பெரோஸ்ஷா சாலை,
புதுதில்லி - 110 001.

**விற்பனை**
'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி 110 001.

மத்தியக் கல்லூரி வளாகம், பல்கலைக் கழக நூலகக் கட்டிடம்,
டாக்டர் அம்பேத்கார் வீதி, பெங்களூர் - 560 001.

குணா பில்டிங்' 304-305, அண்ணாசாலை,
தேனாம்பேட்டை, சென்னை - 600 018.

ஜீவன் தாரா பில்டிங், 4-வது மாடி,
டைமண்ட் ஹார்பர் சாலை, கல்கத்தா - 700 053.

172, மும்பை மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,
தாதர், மும்பை - 400 014.

விலை ரூ. 25

அச்சிட்டோர் : எமரால்ட் அச்சகம், சென்னை - 29.

# உள்ளடக்கம்

# முகவுரை

இராமதாசர் (இராமதாசு) பற்றி ஆங்கிலத்தில் சிறு நூல் ஒன்றினை எழுதுமாறு என்னைப் பணித்தமைக்காக சாகித்திய அகாதமிக்கு முதலில் எனது உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். சிறு பிள்ளையாயிருந்த காலந் தொட்டே இராமதாசரின் கீர்த்தனைகளும் பாடல்களும் எனது காதுகளைக் குளிர்வித்து வந்துள்ளமையால் மிக்க மகிழ்ச்சியோடு இந்தப் பணியினை நான் ஏற்றுக்கொண்டேன். "இராமதாசு" சரித்திரம் ஹரிகதை மூலமாக ஆந்திரத்தின் எல்லா ஊர்களிலும் பரவி இருந்தது. இராமதாசரின் தாசரதி சதகத்தில் உள்ள நூறு கீர்த்தனங்களும் மக்களிடைப் பரவியிருந்தன. இதே பெயரில் வெவ்வேறு நூல்கள் பத்ராசலம் யாதவதாசு என்பவராலும் திருக்கடையூர் கிருஷ்ணதாசு என்பவராலும் தனித்தனியாக எழுதப்பட்டுள்ளன: மேலும் நரசிம்மதாசு. வர ராமதாசு ஆகியோர் கூட்டாகவும் ஒரு நூலை எழுதியுள்ளனர். இதில் ஒன்று இந்நூற்றாண்டின் துவக்கத்தில் சென்னை ஆர். வெங்கடேஸ்வரா அன்ட் கம்பெனியாரால் வெளியிடப்பட்டது: அதற்கு அறிமுகமாக டாக்டர் சர்வபல்லி இராதாகிருஷ்ணன் ஒரு நீண்ட கட்டுரையை வரைந்துள்ளார் என்றால் எந்த அளவுக்கு இராமதாசர் மீது அவர் மதிப்பும் மரியாதையும் கொண்டிருந்தார் என்பதை உணரலாம். இராமதாசர் பற்றிய மேடை நாடகங்களும் மக்களிடைப் பிரபலமாகியிருந்தன: காலஞ்சென்ற டி.வி. கோபாலாச்சாரி அவர்கள், பல்லாரி இராகவா. சித்தூர் வி. நாகய்யா, பர்வதரெட்டி. இராமச்சந்திர ரெட்டி. ரென்ட்டசிந்தலு சத்யநாராயணா, சி.எஸ்.ஆர். ஆஞ்சநேயலு. சந்தூர் மதுசூதன ராவ் போன்ற பிரபல நடிகர்களைக் கொண்டு அத்தகைய நாடகம் ஒன்றினை நடத்திவந்தார்: அதில் இராமதாசராக வேடம் தாங்கியவர் கடைசியில் கூறப்பட்ட மதுசூதன ராவ். நான் மேல் வகுப்புக்களை எட்டியபோது இந்த நாடகத்தை எங்கள் பள்ளியிலும் போட்டோம். நான் அதில் கபீராக நடித்து. அவரது இந்திப் பஜனைப் பாடல்களைப் பாடியது இன்னும் பசுமையாக எனக்கு நினைவில் நிற்கிறது.

காலஞ்சென்ற பிரபல வரலாற்று ஆய்வாளர் பவராஜு வெங்கட கிருஷ்ணா ராவ் 1925இல் "பாரதி"யில் இராமதாசு பற்றிய கட்டுரை ஒன்றினை வெளியிட்டார். ஹரிகதைகள் மற்றும் மேடை நாடகங்கள் பரப்பி வந்த இராமதாசர் வரலாற்றுக்குப் புதிய வரலாற்று பூர்வமான பல சான்றுகளை அந்தக் கட்டுரை கொண்டுவந்தது: பல நிகழ்ச்சிகள்

குறித்துக் கால நிர்ணயமும் அதில் செய்யப்பட்டிருந்தது. இராமதாசரின் வாழ்நாளில் கோல்கொண்டாவிலிருந்து ஆட்சிபுரிந்த சுல்தான்கள் இருவர் என்பதையும் பவராஜுவே முதலில் குறிப்பிட்டவர். இராமதாசர் தாசில்தாராக இருந்தபோதும் அவர் ஆலய நிர்மாணம் செய்து. 1665இல் சிறைப்படுத்தப்பட்ட போதும் அரியணையில் இருந்தவர் ஆறாவது சுல்தானான அப்துல்லா என்றும். 1677இல் இராமதாசர் விடுதலை பெற்றபோது ஆட்சியில் இருந்தவர் ஏழாவது (கடைசி) சுல்தானான அப்துல் ஹசன் தனாஷா என்றும் அவர் குறிப்பிட்டார்.

பக்தி மார்க்கம் பற்றியும் இராமர் வழிபாட்டின் துவக்கமும் வளர்ச்சியும் பற்றியும் நான் முதல் அத்தியாயத்தில் எழுதுவதற்கு எனக்கு மிக மிகத் துணையாயிருந்தது டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் அவர்களின் "இந்தியத் தத்துவம்" என்ற அருமையான நூலே: இதற்காக நான் அவருக்குப் பெரிதும் நன்றிக் கடன்பட்டுள்ளேன். பேராசிரியர் நெலதூரி வெங்கட ராமைய்யா. பேராசிரியர் இ. வசுமதி. கே.வி. பூபால ராவ், மற்றும் வேதம் வெங்கடராய சாஸ்திரி ஆகியோர் குதுப் ஷாகி வரலாறு பற்றியும். கோபண்ணாவின் தாய் மாமனான அக்கண்ணா. மாதண்ணா பற்றியும் எழுதியுள்ள கட்டுரைகளும் நூல்களும் எனக்குப் பெரிதும் துணைநின்றன. இவர்களுக்கும் எனது ஆழ்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். உஸ்மானியாப் பல்கலைக் கழகத்தின் தெலுங்கு மொழித் துறைத் தலைவர் பேரா.என். கிருஷ்ண குமாரிக்கும் ஐதராபாத் மத்தியப் பல்கலைக்கழகத் தெலுங்கு மொழித் துறைத் தலைவர் பேரா. ஜி.வி சுப்ரமண்யம் அவர்களுக்கும். அவர்கள் தங்களிடமிருந்த இராமதாசு பற்றிய ஆய்வேடுகளைக் கொடுத்து உதவி செய்தமைக்காக. நான் எனது வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

பி. ரஜனிகாந்த ராவ்

# பின்னணி

## பக்தி மார்க்கம்

இந்தியாவின் அருட்கவிகள் அனைவரும் இசையின் மூலமாகவே தமது கருத்துக்களை மக்களிடையே பரப்பினர். இசையால் மக்களது உள்ளத்தைக் கவர்ந்திழுக்க முடிந்தது. இதுவே பக்தி மார்க்கம் அல்லது பக்தி நெறி: பரம்பொருளோடு மக்களை நெருக்கமாக்ப் பிணைக்கிற மார்க்கம்.

பக்தி மார்க்கத்தின் துவக்கத்தை மகாபாரதம், இராமாயணம் ஆகிய இதிகாசங்களிலேயே நாம் பார்க்க முடியும். இதைத் தான் டாக்டர் ராதாகிருஷ்ணன் கீழ் வருமாறு கூறினார்: "புராதன வேத சமயம் இன்றைய இந்து சமயமாக மாறுபாடுற்று வந்ததை இதிகாசங்களில் நாம் காண்கிறோம். சாக்தம், பாசுபதம் (சைவம்), பாஞ்சராத்திரம் (வைணவம்) ஆகியன இந்து சமயத்தில் இப்பொழுது புகுகின்றன: இவை வேதங்களுக்கு மாறாக ஆகமங்களோடு தொடர்புடையவை. அதேபோல் ஆலயங்களில் உருவ வழிபாடு, புனித இடங்களுக்கு யாத்திரை மேற்கொள்ளல் ஆகியனவும் சிறிது சிறிதாக வழக்கில் வருகின்றன"

ஹரித்வாரிலிருந்து இராமேஸ்வரம் வரை நதிக்கரைகள், கூடுதுறைகள், மலையுச்சிகள் போன்ற இடங்களில் இராமபிரானுக்கும் திருமாலின் மற்ற அவதாரங்களுக்கும் ஆயிரக்கணக்கான ஆலயங்கள் எழுப்பப்பட்டன. புராணங்கள் புத்துயிர் பெற்றன. அவற்றோடு தலபுராணங்களும், வழிபாட்டு முறை, சிற்ப விதிகள், ஆலய அமைப்பு நியதிகள் ஆகியன கூறும் ஆகமங்களும் இணையப் பெற்றன.

கிறிஸ்துவ அப்தத்தின் முதல் சில நூற்றாண்டுகளில் சைவ நாயன்மார்கள் சிவனைப் போற்றியும், 7, 8ஆம் நூற்றாண்டுகளில் ஆழ்வார்கள் திருமாலைப் போற்றியும் பாசுரங்கள் புனைந்தனர். 12ஆம் நூற்றாண்டில் ஸ்ரீமத் இராமானுசர் அவதரித்து வைணவத்தைப் பரப்பினார்: அதுமுதல் இந்தியா முழுவதும் மகா விஷ்ணுவின் தசாவதாரங்களுக்கும் ஏராளமான ஆலயங்கள் அமைக்கப்பெற்றன.

தென்னிந்தியாவில் ஆழ்வார்களின் பாசுர இனிமைக்கும் பக்திப் பிரவாக மேன்மைக்கும் பாகவத புராணம் காரணமாயிருந்ததைப்போல, கிழக்கிந்தியாவில் பிரம்மவைவர்த்த புராணமானது இராதையையும்

கிருஷ்ணனையும் வழிபட்டோரையும் அவர்களைப் பாடிய கவிகளையும் காந்தமாய்க் கவர்ந்து முன்னிலைக்குக் கொண்டு வந்தது. இராதை இயற்கை அன்னையாகவும் கிருஷ்ணன் பிதாவாகவும் பரம்பொருளாகவும் இவர்களால் கொண்டாடப்பட்டனர். கீதகோவிந்தத்தை இயற்றிய ஜெயதேவரே இக்கவிகளின் ஆதிகுருவாவார். இவர் ஒரிசாவில் 12 ஆம் நூற்றாண்டில் இருந்தவர். இவரை அடுத்து வந்தவர்கள் வங்காளத்தைச் சேர்ந்த சண்டிதாசரும் மிதிலையைச் சேர்ந்த வித்யாபதியும் (15 ஆம் நூற்றாண்டு) வங்காளத்து சைதன்யரும் ஆவர்.

அதே காலத்தில், பண்டை இந்திய வேதாந்தக் கோட்பாடும் பக்தி மார்க்கமும் சூஃபிகளின் (Sufi) சிந்தனைகளில் பிரதிபலிக்கத் தொடங்கின. பூர்வீகத்தில் பாரசீக முஸ்லிம்களான இந்த சூஃபிகள் தங்களது இனிமையான கீர்த்தனங்கள் வாயிலாக வட இந்தியாவிலும் மேற்கு இந்தியாவிலும் பாமர மக்களைப் பெரிதும் கவர்ந்தனர். மக்களைப் பெருந் திரளாகத் திரட்டித் தங்களது கவாலிகள் (qawalis) என்ற இசைப் பாடல்களைச் சேர்ந்து இசைக்குமாறு இவர்கள் செய்தனர். இக்கவாலிகளை இயற்றிய முக்கியமான சூஃபி ஞானிகள் அஜ்மீரைச் சேர்ந்த குவாஜா நிஜாமுதீன் சிஷ்தி, முல்தானைச் சேர்ந்த பாபா பரீதுதீன், தில்லியைச் சேர்ந்த குவாஜா நிஜாமுதீன் அவுலியா ஆகியோர் ஆவர். அவுலியாவின் சீடர்தான் தில்லியில் கில்ஜி சுல்தானின் அரசவைக் கவிஞராகத் திகழ்ந்த அமீர் குஸ்ரோ. 14, 15ஆம் நூற்றாண்டுகளில் பக்தி அலையால் ஈர்க்கப்பட்டு, இந்துக்கள் முஸ்லிம்கள் ஆகிய இரு சாராருமே இவர்களால் பெரிதும் கவரப்பட்டு, இவர்களது தர்காக்களில் குழுமினர். ஒன்றே குலம், ஒருவனே பரம்பொருள் என்ற தத்துவம் சுவாமி ராமானந்தர், கபீர், குரு நானக், ஆனந்த் சித்கான் ஆகியோரது இனிய இசைப் பாக்களிலும் ஒலித்தது.

அந்த அருட்கவிகளால் பரப்பப்பட்ட முக்கியமான கருத்து கீழ்வரும் தோஹேக்களில் வலியுறுத்தப் படுகிறது:

பஜ் மன் ராம், ரகீம்!
பஜ் மன் கிருஷ்ண, கரீம்! (கபீர்)

ராம் கஹோ ரஹ்மான் கஹோ கோவோ
கன்ஹ கஹோ மகாதேவரீ, பரஸ்நாத் கஹோ
கோவோ பிரம்ம, சகல பிரம்ம ஸ்வயமேஸ்வரீ
(ஆனந்த சித்கான்)

16ஆம் நூற்றாண்டில் வட இந்தியாவில் இசை மூலம் பக்தி பரப்பிய ஞானிகளுள் முக்கியமான ஒருவர் ஆந்திராவைச் சேர்ந்த வல்லபாச்சாரியர். தமது சமஸ்கிருதக் கீர்த்தனங்கள் மூலம் பிருந்தாவனம் தொடங்கி துவாரகை வரை இவர் கிருஷ்ண பக்தியைப் பரப்பினார். அஷ்டசாப் என்றழைக்கப்படும் கவிகளுக்கு வழிகாட்டி இவரே. பிரஜ்பூமியைச் சேர்ந்த சூர் தாஸ். ராஜஸ்தானத்து மீராபாய் முதலியோர் இத்தொகுதியில் அடங்குவர். பிரஜ்பூமியைச் சேர்ந்த கோஸ்வாமி துளசிதாஸ் ஸ்ரீ ராமர் மீது ஏராளமான கீர்த்தனைகளைப் புனைந்தார். போஜ்புரி மொழியிலமைந்த "ராமசரிதமனஸ்" அவற்றுள் மிகவும் கீர்த்தி பெற்றது.

பாமரர்களுக்கென பாக்கள் புனைவதற்கு மாறாக, கற்றவர் செல்வந்தர் மற்றும் பாமரரும் பாராட்டும் வகையிலும், அரசவையிலும் ஆலயத்திலும் ஓதும் வகையிலும் பாக்கள் இயற்றினார் அன்னமாச்சாரியார். 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இவர் திருப்பதியில் கோயில்கொண்டுள்ள சுவாமி வெங்கடேஸ்வரர் மீது நிறைந்த பக்தி பூண்டவர் தெலுங்கிலும் சமஸ்கிருதத்திலுமாக முப்பதாயிரத்திற்கும் அதிகமான கீர்த்தனைகள் இவரால் இயற்றப்பட்டன. ஆலயத்திலும் வீட்டிலும், தனித்திருந்தும் கூட்டமாகவும் ஆண்டவனை ஆடிப்பாடித் துதிக்கும் முறையினை வகுத்தவர் இவரேயாதலால் தென்னிந்தியா முழுவதிலும் "சங்கீர்த்தனாச்சாரியர்" என இவர் புகழப்பட்டார்.

அன்னமாச்சாரியாரும் அவரது வழிவந்தோருமாக மூன்று நான்கு தலைமுறையினர் விஜயநகரப் பேரரசர்களால் ஆதரிக்கப்பெற்றனர். 1565இல் அப்பேரரசின் வீழ்ச்சிக்குப் பிறகு இவ்வாதரவு இன்மையால் அன்னமாச்சாரியாரது வழிவந்தோரால் திருப்பதியில் சங்கீர்த்தனம் செய்தல் இயலாமற்போயிற்று.

இதற்கு சுமார் ஒரு நூற்றாண்டுக்குப் பின்னர், 1650ஆம் ஆண்டு வாக்கில், பத்ராசலத்தில் கோயில் கொண்டுள்ள ஸ்ரீ இராமருடைய பக்தராகப் புகழ் பெற்றார் கஞ்சேரல கோபண்ணா அவர்கள் இவர் கோல்கொண்டாவிலிருந்து ஆட்சி செலுத்திய குதுபஷாஹி சுல்தான்களிடம் வருவாய்த்துறை அதிகாரியாக ஊழியம் புரிந்துவந்த இளைஞர். இவரே பின்னர் பத்ராசல இராமதாசர் (தெலுங்கில் "ராமதாசு") எனப் புகழ்பெற்றவர். அற்புதமான கீர்த்தனங்களை இயற்றியதோடு "பஜனைக் குழு" பாரம்பரியத்துக்கும் வழிகோலினோர் இவர்

## இராமர் வழிபாடும் பத்ராசலமும்

இப்பொழுது பத்ரா குன்றின் மீது இராமபிரானது ஆலயமும் வழிபாடும் தோன்றியது பற்றிய ஐதிகங்களையும் ஆராய்ச்சி முடிவுகளையும் பற்றிக் கொஞ்சம் தெரிந்து கொள்வது நல்லது. பத்ராசலத்து ஸ்ரீ இராமர் ஆலயம் ஒரு புனித யாத்திரைக்கான முக்கிய இடம் என்பது பிரம்மாண்டபுராணத்தில் முதன்முதலில் குறிப்பிடப்படுகிறது. இப்புராணம் 9ஆம் நூற்றாண்டு வாக்கில்தான் இன்றைய வடிவைப் பெரிதும் பெற்றிருத்தல் வேண்டும். இக்காலத்தில்தான் ஒவ்வொரு புராணத்திலும் விழாக்கள், கொண்டாட்டங்கள், யாத்திரைகள், ஒவ்வொரு தெய்வத்துக்கும் உகந்த புனித மந்திரங்கள் போன்ற செய்திகள் சேர்க்கப் பெற்றன. நதிக்கரை மீது கட்டப்பட்ட ஒவ்வொரு கோயிலிலும் பன்னிரண்டாண்டுக் கொருமுறை புஷ்கர மேளா கொண்டாட வேண்டியிருந்தது; இதற்குரிய நாள் முதலியன அவ்வாண்டில் ராசி மண்டலத்தில் குரு சஞ்சரிப்பதை வைத்துக் கணக்கிடப்பட்டது. இராம நவமி, ஜென்மாஷ்டமி, விஜயதசமி போன்றவற்றை ஒரே நாளில் நாடு முழுதும் கொண்டாடுதல் வழக்கமாயிற்று. இவ்வாறு ஆண்டு முழுவதற்குமான சமய விழா நாட்கள் குறித்த பஞ்சாங்கம் இக்காலத்தில்தான் உருவாக்கப் பட்டிருத்தல் வேண்டும்.

பிரம்மாண்டபுராணத்தில் உள்ள கௌதமி மகாத்மியம் என்ற பகுதியானது கோதாவரி நதியின் பூர்விகம் பற்றிய புராணத்தைக் கூறுகிறது. அதில் "பத்ராசல க்ஷேத்திர மகாத்மியம்" என்ற அத்தியாயமானது பத்ராசலத்தைப் பற்றியது. அதில் புராணத்தை விவரிக்கும் சூத மகரிஷி கீழ் வருமாறு கூறுகிறார் "தண்டகாரண்யத்தின் (தக்கணம்) நடுவில் கோதாவரியின் கரையில் இப்பொழுது பத்ராசலம் என்கிற புனித மலையின் மேல் ஸ்ரீராமர். தமது வனவாசத்தின் போது சீதையோடும் லக்ஷ்மணனோடும் ஒரு சமயம் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். அப்பொழுது பத்ரன் ஒரு மலைவாசியின் உருவில் அவர் முன் வந்து, அவருக்கும் தனக்கும் ஏற்பட்டுள்ள தொடர்பை மறக்க இயலாததொன்றாகச் செய்தல்வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். அவனுக்கு அளித்த வரத்துக்கேற்ப ஸ்ரீராமர் அம்மலையின் மீது ஒரு தெய்வமாக அமர்ந்து, மலையை வலம்வந்து தம்மை வழிபடும் பக்தர்கள் அனைவருக்கும் வீடுபேறு நல்கி வருகிறார்." அது முதற்கொண்டு

அங்கு அமையப்பெற்ற அவ்வூர் பத்ராசலம் என்று வழங்கிவருகிறது. அதற்கு அருகிலுள்ள பர்ணசாலா என்ற ஊரில்தான் சபரி என்கிற சவோரா மலைவாசிப் பெண் இராம பிரானுக்கு வனவாசத்தின் போது விருந்தளித்து உபசரித்தாள்.

இன்றைய ஆந்திரப் பிரதேசத்தில் கம்மம் மாவட்டத்தில் உள்ளது பத்ராசலம். அது 12, 13ஆம் நூற்றாண்டில் காகதீயப் பேரரசில் ஒரு சிறிய உட்கோட்டமாக இருந்தது. அப்பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்னர் தில்லி சுல்தானியத்தில் அது இணைந்து, 1424இல் அன்னப்ப ரகூத் அஸ்வர ராவ் என்பவருக்கு ஜாகீராக வழங்கப்பட்டது. இக்காலத்தில் தான் பத்ராசலத்தின் மகத்துவம் கொஞ்சங் கொஞ்சமாகத் துவங்கிற்று. எனினும், வாரங்கல், ராமப்பா, ஆலம்புரம் போன்ற ஊர்களிலுள்ள ஆலயங்களில் காணப்படும் கலை சிற்ப வேலைப்பாடுகளை இவ்வாலயத்தில் காண இயலாது. இதன் பிறகும் கூட சுமார் இரு நூற்றாண்டு காலம் இவ்வாலயம் மரம் செடி கொடிகள் மண்டி மறைந்து கிடந்தது.

17ஆம் நூற்றாண்டில் தம்மல தம்மக்கா என்ற ஒரு பக்தையின் கனவில் ஸ்ரீராமரே தோன்றி, சீதை, இலக்குவன் மற்றும் தமது விக்கிரகங்கள் புதரில் மறையுண்டு கிடப்பதைத் தெரிவித்து, அவ்விடத்தில் ஒரு பந்தல் அமைக்குமாறும் முறையான வழிபாட்டுக்கு ஏற்பாடுகள் செய்யுமாறும் கூறி, பின்னர் அந்நூற்றாண்டின் நடுப்பகுதியில் ஒரு இளைஞர் தோன்றி பொறுப்புக்களை மேற்கொள்வார் என்றும் சொன்னாராம். இப்பெண்மணியும் அவளது மகளும் ஊர்ப் பெரியவர்களும் சேர்ந்து புதர்களை நீக்கி, பதுமங்களை வெளிப்படுத்தி, ஒரு மண்டபமும் கட்டி, நித்திய பூசைகளுக்கு ஏற்பாடும் செய்தனர். சிறிது காலத்தில் 1650ஆம் ஆண்டு வாக்கில் கோல்கொண்டாப் பேரரசில் பத்ராசலம் பகுதிக்குத் தாசில்தாராகப் பொறுப்பேற்றார் கஞ்சேர்ல கோபண்ணா. இந்த இளம் அதிகாரியே பின்னர் பக்த இராமதாசர் எனப்பட்டார். மந்திர சாஸ்திர நூலாகிய "ஸ்ரீ சாரதா திலகத்தில்" விதிக்கப்பட்டுள்ளபடி தாரக மந்திரம் அல்லது இராம மந்திரத்தில் உள்ள தியான ஸ்லோகங்களில் விவரிக்கப் பட்டுள்ளவாறே மூன்று தெய்வங்களின் பாவமும் வர்ணனையும் அமைந்திருந்தது வியக்கத்தக்கது. "இராமரின் ஒரு கை முழங்காலின் மீது. படிந்திருக்கிறது; மற்றது ஞான முத்திரையைக் காண்பிக்கிறது; இடது தொடையின் மீது அமர்ந்துள்ள சீதாதேவியின் கண்களை ஊடுருவிப் பார்ப்பது போன்று இருக்கிறது இராமரின் முகம்; அருகில்

இலக்குவன் வில்லில் அம்பு பூட்டித் தயாராக நிற்கிறார்: கர்ப்பக்கிருகத்தில் பீடத்தின் மீது அமர்ந்திருக்கும் இராமரது கரிய முகத்தினின்றும் நீல ஒளி பொங்கி எங்கும் வியாபிக்கிறது." இராமரது இந்த ஆலயம் ஒரு உன்னதப் படைப்பு: மனிதனது ஆன்மா மேலே மேலே உயர்ந்து பரமாத்மாவுடன் ஐக்கியமடைவதை உணர்த்துவதோடு, மனிதனது பிரயத்தனங்களை தெய்வீகம் வெற்றிகொள்வதையும் அது குறிக்கிறது: உயர்ந்த மனித இலட்சியங்களையும் நேரிய பண்புகளையும் அது பிரதிபலிக்கிறது. இறைவனின் மற்ற திருநாமங்களை விட இராம நாமமே சிறந்தது என தலைமுறை தலைமுறையாக நாட்டு மக்கள் நினைத்தனர். இந்த உண்மையை ஒரு முறை கைலாயத்தில் சிவபெருமானே பார்வதிக்குக் கூறியதாக நம்பப்படுகிறது. இராம நாமத்தை உச்சரிப்பதன் பயனாக எல்லா உயிர்களுமே இந்த உலகமாகிய துன்பக்கடலை நீந்திக் கடந்து உய்ய முடியும் என்று சிவன் அப்பொழுது எடுத்துக்கூறினாராம். எனவேதான் தாரக மந்திரம் என்று இது அழைக்கப்படுகிறது.

இராமதாசர் தாசில்தார் பொறுப்பை மேற்கொள்ளுமுன்பே இத் தாரக மந்திர தீட்சையைப் பெற்றிருந்தார் என்று கூறப்படுகிறது.

## கோல்கொண்டா

குதுப் ஷாகி அரசில் இராம பக்தரான கோபண்ணா எவ்வாறு தாசில்தாராக முடிந்தது, இராமருக்கு ஆலயம் எழுப்ப முடிந்தது என்பது ஒரு சுவாரசியமான கதை. அன்று தக்கணத்தில் ஒரு கீர்த்திமிக்க நகரம் கோல்கொண்டா. பாமனிப் பேரரசின் சிதைவுக்குப் பிறகு அதன் தலைநகரமான குல்பர்காவின் சிறப்பான இடத்தை கோல்கொண்டா பிடித்துக் கொண்டு, மத்தியக் கிழக்கு மற்றும் ஐரோப்பிய நாடுகளைச் சேர்ந்த பயணிகளையும் வணிகர்களையும் ஈர்த்தது. கோகினூர் போன்ற வைரங்களுக்கும் பிற உயர்ந்த வகைக் கனிப்பொருட்களுக்கும் பெயர்பெற்றிருந்ததால் அது பிறரது பொறாமைக்கும் தாக்குதல்களுக்கும் ஆளாயிற்று. ஷாஜகான், அவுரங்கசீப் ஆகிய மொகலாயப் பேரரசர்கள் அதன் மீது தாக்குதல் தொடுத்துக் கொள்ளையிட்டு, திறையும் வசூலித்தனர். ஆயினும் குதுப் ஷாகி சுல்தான்களால் அருளோடும் பரிவோடும் ஏழு தலைமுறைக் காலம் நன்கு பரிபாலிக்கப்பட்ட அந்நாட்டின் ஆன்மிகச் செல்வங்களை அவர்களால் கவர்ந்து செல்ல முடியவில்லை.

குதுப் ஷாகி வம்சத்தின் ஸ்தாபகரான சுல்தான் குலி தனது இந்துக் குடிகள் விஷயத்தில் இரண்டு கொள்கைகளைப் பின்பற்றினார்: ஒன்று, சமயப் பொறை; அடுத்தது, அரசியல் உரிமைகளில் பாகுபாடு காட்டாமை. அவரது பின் வந்தோரும் இவற்றைப் பெரும்பாலும் பின்பற்றினர். மேலும் ஒரு படி அதிகமாகவே கூட அவர்கள் சென்று. தெலுங்கு மொழிக்கும் இசைக்கும் ஆதரவு நல்கினர். எனவேதான் ஆந்திர மக்கள் அம்மன்னர்களது நினைவுகளை இன்றும் நன்றி உணர்வோடும் அன்போடும் போற்றி வருகின்றனர்.

மாலிக் இப்ராஹிம் குதுப் ஷா என்ற சுல்தான் - இவர் மாலிக்பா இராமன் என்று பிரியமாக அழைக்கப்பட்டார் - தனது அவையில் இலக்கியப் பேரவைகளை அடிக்கடி கூட்டினார். அவரது அவையிலிருந்த தெலுங்கு மற்றும் பாரசிகக் கவிஞர்கள் மட்டுமின்றி அண்டை அரசுகளிலும் ஜமீன்தார்களிடமும் இருந்தவர்களும் ஆர்வத்தோடு அவற்றில் கலந்துகொண்டனர். அத்தங்கி கங்காதர கவி "தபதி சம்வரணம்" என்கிற தெலுங்கு கவிதை நூலை இந்த சுல்தானுக்குச் சமர்ப்பணம் செய்தார். "யயாதி சரித்திரம்" என்ற நூலைத் தூய தெலுங்கில் படைத்த பொன்னிகண்டி தெலகண்ணா இந்த சுல்தானின் அவையிலிருந்தவரே. சுல்தானின் மகன்களுக்கும் தெலுங்கு சொல்லித்தரப்பட்டது. அவர்களில் ஒருவரான முகம்மது குலி எழுதிய உருது கவிதைகளில் ஏராளமான தெலுங்குச் சொற்களைக் காணலாம். "வைஜயந்தி விலாசம்" என்ற நூலின் புகழ் பெற்ற கவிஞரான சரங்கு திம்மையா, தன்னை சுல்தான் முகம்மது குதுப் ஷா அடிக்கடி அழைத்து இலக்கியப் பேரவைகளில் பங்கு கொள்ளச் செய்ததாகப் பெருமையாகக் கூறிக்கொள்கிறார். பாரசிகம் மற்றும் உருதுவுடன் தெலுங்கும் ஆட்சிமொழியாக ஆக்கப்பட்டிருந்தது.

இப்ராஹிம் குதுப் ஷா, பாகீரதி என்ற இந்துப் பெண்ணை மணந்திருந்தார். அவரது மகன் முகம்மது குலி, பாக்மதி (பாக்யவதி) என்ற இந்துப் பெண்ணைக் காதலித்து மணந்துகொண்டார். இரு சமுதாயத்தினரும் நெருங்கிப் பழகுவதற்கு இவை உதவின. பாக்மதியின் பெயரில் கோல்கொண்டாவுக்கு எட்டு கல் தொலைவில் பாக்யாநகர் என்கிற ஊரையும் முகம்மது குலி நிறுவினார். அதுவே இன்றைய ஹைதராபாத் ஆகும்.

ஆறாவது சுல்தான் அப்துல்லாவின் விசேஷமான கல்வெட்டொன்று கிருஷ்ணா நதிக் கரையில் ஒரு கிராமத்தில்

காணப்படுகிறது. வேதங்களையும் சாத்திரங்களையும் மாணாக்கர் களுக்குச் சொல்லித் தருவதற்கும் வேள்விகளைச் செய்வதற்கும் ஒரு வேதியருக்கு அக்கிராமத்தை மானியமாக அது அளித்தது. தெலுங்கில் பதங்கள் பாடுவதில் கீர்த்திபெற்ற க்ஷேத்ரய்யா, ஆறாவது சுல்தான் அப்துல்லா குதுப்ஷா ஒரு தூதுவர் மூலமாகத் தனக்கு வெகுமதிகள் அனுப்பி அரசவைக்கு வருமாறு அழைப்பித்தார் என ஒரு பாடலில் தெரிவிக்கிறார்.

ஏழாவது சுல்தானான அபுல் ஹசன் தனாஷாவின் ஆட்சியில் அக்பர் ஷா - இவர் படே சாகிப் எனவும் அழைக்கப்பட்டார் - என்ற முஸ்லிம் ஸூஃபி ஞானியால் சொல்லலங்காரம் பற்றிய " ஸ்ருங்கார மஞ்சரி" என்ற சமஸ்கிருத நூல் இயற்றப்பட்டது. இவ்வாசிரியரது தந்தையான ஷா ராஜு குட்டலும் ஒரு ஸூஃபி ஞானியே. இவர்கள் இருவருமே ஏழாவது சுல்தானுக்கு ஆசிரியராக இருந்தனர். இவர்களது ஆசிரமத்தில் கல்வி பயின்ற காலத்திலேயே இளவரசராக இருந்த அபுல் ஹசன் துறவை மேற்கொண்டு, ஸூஃபி கோட்பாட்டில் பயிற்சியும் பெற்றார். இதனால்தான் எப்பொழுதும் மகிழ்வோடு இருப்பவர் என்று பொருள்படும் தனாஷா என்ற பெயரும் இவருக்குக் கிடைத்தது. 1678இல் சுல்தான் அபுல் ஹசன் தனாஷா தனது மகாமந்திரி (முதலமைச்சர்) மாதண்ணாவோடு கிருஷ்ணா மாவட்டத்தில் பயணம் செய்துகொண்டிருந்தபோது குச்சிபுடி பாகவத மேளா குழுவினர் நடத்திய பாரிஜாத நாடகத்தைப் பார்த்துப் பூரித்துப்போய், அங்கேயே ஒரு ஆணையின் மூலம் குச்சிப்புடி கிராமத்தையும் அதைச் சேர்ந்த வயல்களையும் பாகவத மேளா நடத்திவந்த பிராமணக் குடும்பங்களுக்கு மானியமாக வழங்கினார்.

குதுப் ஷாகி சுல்தான்கள் தமது குடிகளில் பெருவாரியாக இருந்த இந்துக்களுக்கு நிறையச் சமய உரிமைகள் வழங்கினர். ஆறாவது சுல்தான் அப்துல்லாவின் நிதியமைச்சராயிருந்த மீர்ஜும்லா முகம்மது சையது என்பவர் ஹனும்கொண்டவைச் சேர்ந்த பானுஜய்ய பந்துலுவின் மகன்களான அக்கண்ணா, மாதண்ணா ஆகிய இரு அறிஞர்களை எழுத்தர்களாகத் தனது துறையில் சேர்த்துக்கொண்டார். இவர்கள் சமஸ்கிருதம் மற்றும் தெலுங்கில் மட்டுமன்றி பார்சி, அரபி, மராட்டி மொழிகளிலும் .வல்லுநராயிருந்தனர். பின்னர் சுல்தானுக் கெதிராக மீர்ஜும்லா போர்க்கொடி உயர்த்திய காலத்தில். அக்கண்ணாவும் மாதண்ணாவும் சுல்தானுக்கு விசுவாசமாகவே இருந்தனர். மீர்ஜும்லா

பெரும் பொருள் சம்பாதித்து, சொந்தமாகப் படை திரட்டி, அவுரங்க சீப்புடன் சேர்ந்துகொண்டு முகலாயப் படையில் ஒரு தளபதியானார்.

மாதண்ணாவின் சகோதரி மகன்தான் கஞ்சேர்ல கோபண்ணா. இந்த உறவின் பயனாகவே மீர்ஜூம்லா மூலம் பத்ராசலத்தின் தாசில்தாராக கோபண்ணா நியமனம் பெற்றார். அவுரங்கசீப்பின் படைகளிடம் சுல்தான் அப்துல்லா தோல்வியுற்று, குல்பர்கா தனது சுதந்திரத்தை இழந்து. பொன்னும் பொருளும் திறையாகச் செலுத்த நேர்ந்தது; மேலும் முகலாயருக்குக் கட்டுப்பட்டு, மராட்டியருடனும் பிஜப்பூருடனும் நட்பு பாராட்ட முடியாமற் போயிற்று. இதனால் முகலாயச் சார்புடைய சில வரலாற்று ஆசிரியர்கள் அக்கண்ணாவும் மாதண்ணாவும் தமது சுல்தானுக்குத் துரோகம் இழைத்து விட்டதாகக் கூறுகின்றனர். இது உண்மையல்ல; சதி செய்துகொண்டிருந்த முஸ்லிம் பிரபுக்களுக் கெதிராக இவ்விருவரும் தமது சுல்தானுக்கு விசுவாசமாகவே இருந்ததுமட்டுமன்றி, கோல்கொண்டா அரசின் சுதந்திரத்தைப் பேணவேண்டுமென்பதிலும் உறுதியாயிருந்தனர். சையது முசபா, மூசா போன்ற பிரபுக்களுக் கெதிராகக் கடைசி குதுப் ஷாகி சுல்தான் அபுல் ஹசனின் கரத்தை இவர்கள் வலுப்படுத்தினர். இதனால் பதவி உயர்வும் இவர்களுக்குத் தரப்பட்டது; சதிகாரப் பிரபுக்களுக்குப் பதிலாக மாதண்ணா முதலமைச்சராகவும், அக்கண்ணா தலைமைத் தளபதியாகவும் நியமனம் பெற்றனர்.

தான் முதலமைச்சராயிருந்த பன்னிரண்டு ஆண்டுகளில் மாதண்ணாவானவர் முகலாயர்களை நெருங்கவொட்டாமல் செய்தது மட்டுமின்றி, சத்ரபதி சிவாஜியை கோல்கொண்டாவுக்கு வரவழைத்து மரியாதையும் செய்தார். இதனால் அவுரங்கசீப் ஆத்திரங்கொண்டார் ஆயினும் சுல்தான் அபுல் ஹசன் இவர்களது ஆலோசனைகளை மிகவும் மதித்தார். அவுரங்கசீப் ஒரு சுன்னி முஸ்லிம் ஆதலால் இந்துக்களுக்கு உயர்பதவி அளிக்கும் ஷியா முஸ்லிமாகிய சுல்தானை வெறுத்தார். சதிகார முஸ்லிம் பிரபுக்களும் சுல்தானின் அந்தப்புரத்து உறவினர்களும் அவுரங்கசீபுக்கு உதவிபுரிய, கோல்கொண்டா நகர்த் தெருவில் அக்கண்ணாவும், மாதண்ணாவும், கொலையுண்டனர்.

இக்கொலைகளுக்குப் பின் இரண்டே ஆண்டுகளில் கோல் கொண்டா கோட்டை அவுரங்கசீப்பின் படைகளால் கைப்பற்றப்பட்டது. கடைசி சுல்தான் அபுல் ஹசன் சிறை பிடிக்கப்பட்டார் ஹசனின் கடைசி ஆசையின்படி அவரது சடலம் சூபி குருவான ஷா ராஜூ குட்டாலின் மசாருக்கு (சமாதி) அருகில் அடக்கம் செய்யப்பட்டது.

# ஆலயம் எழுப்பலும் பக்தி நெறி பேணலும்

## (இராமதாசரின் வரலாறு)

ஆந்திரப் பிரதேசத்தின் கம்மம் மாவட்டத்தில் பத்ராசலம் வட்டத்தில் உள்ளது நெலகொண்டபள்ளி என்கிற எளிய சாதாரண கிராமம். அங்கு சமஸ்கிருதத்திலும் தெலுங்கிலும் நல்ல பாண்டித்தியம் பெற்ற கஞ்சேர்ல லிங்கண்ண மந்திரி என்ற அந்தணர் ஒருவர் இருந்தார். ஓரளவு வசதி படைத்த குடும்பம். வாரங்கலைச் சேர்ந்த பிங்கலி பானுஜய்ய பந்துலு என்பாரின் மகள் காமம்மாவை இவர் மணந்திருந்தார். பந்துலு கோல்கொண்டா அரசில் ஹனுமகொண்டாவில் வருவாய் ஆய்வாளராக (Revenue Inspector) இருந்தார். காமம்மாவின் உடன் பிறந்தவர்கள்தாம் அக்கண்ணாவும் மாதண்ணாவும். இவர்கள் கல்வி கேள்விகளிலும் போர்ப்பயிற்சியிலும் சிறந்துவிளங்கி கோல்கொண்டா அரசுப் பணியில் 1640ஆம் ஆண்டு வாக்கில் சேர்ந்தனர்.

லிங்கண்ண மந்திரிக்கும் காமம்மாவுக்கும் ஒரே மகனாக கோபண்ணா 1630ஆம் ஆண்டு வாக்கில் பிறந்தார். குழந்தைப் பருவம் முதலே தெய்வபக்தி நிறைந்த கோபண்ணா சமஸ்கிருதம், தெலுங்கு கன்னடம், பார்சி, உருது ஆகிய மொழிகளைக் கற்றார். அந்தணர்களுள் நியோகி என்ற வகுப்பைச் சேர்ந்தவராக இருந்தாலும், குல வழக்கப்படி கோபண்ணாவுக்கு இரகுநாத பட்டர் என்பவரால் அஷ்டாக்ஷரி மந்திரத் தீக்கை செய்துவைக்கப்பட்டது.. இது ஸ்ரீமந் நாராயணனைத் துதிக்கும் மந்திரம்.

நாராயண மந்திரத்தோடு காயத்திரியும் அவருக்குச் சொல்லித் தரப்பட்டது. நாராயண ஜபத்தையும் அவர் செய்து வந்தார் நாராயணதாசர் - நாராயணனுடைய அடிமை - என்றே தன்னை அவர் கூறிக்கொண்டார். பால இராமாயணம் பயின்றார். பௌராணிகர்களின் பிரசங்கங்களுக்குச் சென்று புராணங்களையும் இராமாயணத்தையும் நன்கறிந்தார். இவற்றின் மூலம் இராமபிரானும் பரம்பொருளும் ஒன்றே என்பதை அறிந்தார். இந்த உணர்வினைத் தனது பத்தாவது வயதிலேயே அவர் சௌராஷ்டிர ராகத்தில் பாடிய "தக்குவேதி மனக்கு" என்று தொடங்கும் கீர்த்தனை தெரிவிக்கிறது.

"இராமபிரான் நம்மருகில் இருக்கையில் எந்த விருப்பம்தான் நிறைவேறாது?" என்று அதில் கேட்கிறார். இவரது கீர்த்தனைகளில்

காணப்படும் "நாராயணதாசுலு" என்கிற முத்திரையை இக்கீர்த்தனையிலும் காணலாம். இராமாயணத்தில் மனதைப் பறிகொடுத்து உணர்ச்சி கொந்தளிக்கும் கிராமிய சந்தத்திலமைந்ததொரு நீண்ட பாடலையும் இதே காலத்தில் இவர் எழுதினார். ஆனந்த பைரவியில் "ஆச புட்டென" என்று அது தொடங்குகிறது. இதன் மத்தியில் "இராமபிரானுக்குக் காவல் புரியும் இராமதாசன்" என தன்னைப் பற்றிக் கூறிக்கொள்கிறார். இவற்றைப் பற்றிப் பின்னர் மேலும் விரிவாகப் பார்க்கலாம்.

இராமதாசர் மீதான யக்ஷ கானங்கள் சில செய்திகளைக் கூறுகின்றன. கபீர்தாசர் என்ற முஸ்லிம் பக்கிரி ஒரு நாள் கோபண்ணாவின் இல்லத்துக்கு வந்தார். சாதுக்கள் பலரும் அடிக்கடி இவ்வாறு வருவது வழக்கம். இராமதாசர் அவர்களை அன்போடு உபசரிப்பது வழக்கம். இராமதாசருக்குத் தாரக மந்திரத்தை கபீர் போதித்தார். இதன் பின்னர் இராமதாசர் ஸ்ரீ இராமரைத் தரிசிப்பதற்காக பத்ராசலம் சென்றாராம்: அங்கு கபீர்தாசர் ஆலயத்துக்குள் பிரவேசித்ததைக் கண்டித்து புரோகிதர்கள் கூச்சலிட்டுக் கொண்டிருந்தனராம்: இதில் இராமதாசர் தலையிட்டுத் தீர்த்துவைத்ததாக இந்நூற்றாண்டின் ஆரம்பத்தில் எழுதப்பட்ட ஒரு தெலுங்கு மேடை நாடகத்தின் ஆசிரியர் தெரிவிக்கிறார்.

இப்பொழுது முதல் கோபண்ணாவின் அன்றாட நடைமுறைகள் முற்றிலும் மாறின. பகவானது நாமத்தைக் கோடிமுறை எழுதும் 'இராம கோடி' வழக்கம் போன்ற ஆசாரங்களை அவர் பின்பற்றலானார். பக்தர்கள், சந்நியாசிகள், யாத்திரிகர்கள் ஆகியோரை ஓம்பலானார்.

கோபண்ணாவுக்குப் பதினைந்து அல்லது இருபது வயது இருக்கும்போது அவரது பெற்றோர் இறந்தனர். ஊர்ப் பெரியோர்களின் ஆலோசனையின் பேரிலும் உதவியுடனும் கமலாவை மணந்து, ஒரு மகனுக்கும் தந்தையானார் கோபண்ணா. ஆனால் பெற்றோர் விட்டுச் சென்ற சொற்ப சொத்துக்களைக் கொண்டு காலந்தள்ள முடியாமல் அவரது குடும்பம் சிரமப்பட்டது. கோபண்ணா சாதுக்களுக்கும் பக்தர்களுக்கும் யாத்திரிகர்களுக்கும் இடைவிடாது தானதர்மங்கள் செய்ததும் இதற்கு ஒரு முக்கியமான காரணம். எனவே இவர் ஒரு கையில் தம்பூராவும் ஒரு கையில் பையுமாக ஊரின் தெருக்களில் கீர்த்தனங்கள் பாடிச் சென்று ஊர் மக்கள் அளித்த அரிசி, பருப்பு முதலிய பண்டங்களைப் பெற்று வாழ வேண்டியிருந்தது.

இளவேனிற் காலம் நெருங்கியதும், பத்ராசலத்தில் நடக்கப்போகும் இராம நவமிக் கொண்டாட்டங்களில் கலந்துகொள்ளும் ஆர்வம் மேலிட்டது. ஆனால் இந்த ஏழ்மையில் எப்படிப் போவது? ஏதாவது ஒரு வேலை கிடைத்தால் நன்றாக இருக்கும் என்று தோன்றிற்று. தனது தாய் மாமன்கள் அக்கண்ணா, மாதண்ணா ஆகியோரின் நினைவு வந்தது. அண்டை வீட்டு மனிதர்களின் உதவி பெற்று ஐதராபாத்துக்குப் புறப்பட்டார்.

> **"இராம பிரானை ஒரு போதும மறவோம் மறவோம். யமனை ஒரு போதும் அஞ்சோம் அஞ்சோம்! நாளும் நாங்கள் கோவிந்தனுக்கே ஆளாவோம்! பரம்பொருளையே என்றும் நினைவோம் நினைவோம்! சீதாராமனுக்கே என்றும் பணி செய்வோம்! இதில் ஒரு கணமும் நாங்கள் ஓயோம்! பத்ராசல நாதனைச் சென்று தவறாமல் தரிசித்தால் புண்ணியமும் பெருவாழ்வும் எய்தப் பெறலாம்!"**

என்ற பாடலைப் பாடிக்கொண்டே ஐதராபாதை அடைந்து, தனது மாமன்களுக்குச் சொல்லியனுப்பினார் அவர்.

இராமதாசு சரித்திரம் என்ற யக்ஷகானம் போன்றவை, கோபண்ணா சென்ற போது அக்கண்ணாவும் மாதண்ணாவும் பேரரசர் தானிஷாவுடன் ஆலோசனை நடத்திக் கொண்டிருந்தனர் என்கின்றன. இது சரியல்ல. தானிஷா என்றால் எப்பொழுதும் பரமானந்தத்தில் ஆழ்ந்திருக்கிற அரசர் என்பது பொருள். இந்தப் புனைபெயரைப் பூண்டிருந்தவர் குதுப் ஷாகி சுல்தான் அப்துல் ஹசன். கடைசி சுல்தானான இவர் 1672இல் பட்டமேற்றவர். ஆனால் கோப்ண்ணா ஐதராபாதை அடைந்ததோ 1650இல். எனவே அப்பொழுது ஆட்சி செலுத்தியவர் அப்துல் ஹசனது மாமனாரான அப்துல்லா குதுப் ஷா. இவரது ஆட்சிக் காலம் 1626-1672. மேலும் அப்பொழுது மாதண்ணாவும் அக்கண்ணாவும் உயர்பதவி வகிக்கவில்லை. எனவே அவர்கள் ஆலோசனை நடத்தியது தமது துறையின் தலைவரும் முதலமைச்சருமான மீர்ஜும்லாவுடன் தான் என்று நாம் கொள்ளலாம். அக்கண்ணா மற்றும் மாதண்ணாவின் பணியிலும் திறமையிலும் மிக்க மதிப்பு வைத்திருந்த மீர்ஜும்லா அவர்களின் உறவினரான கோபண்ணாவுக்கு அன்போடு பேட்டி தந்தார். அப்பொழுது கோபண்ணா மீர்ஜும்லா மீது சில பாடல்களும் உடனே புனைந்து பாடியிருத்தல் கூடும். இவற்றால் மகிழ்ந்த மீர்ஜும்லா கோபண்ணாவை பத்ராசலம் மற்றும் பாலவஞ்சா ஆகிய பகுதிகளுக்குத்

தாசில்தாராக நியமனம் செய்தார். இரண்டு ஆண்டுகள் சென்றன. அக்கண்ணா, மாதண்ணா, மீர்ஜும்லா ஆகியோர் 1652இல் கோபண்ணாவின் சிறப்பான பணியினைப் பற்றி எடுத்துக்கூறியதோடு, பத்ராசலத்து ஸ்ரீ இராமர் ஆலயத்தின் அன்றாட பூசைக்கென மானியம் வழங்கவேண்டுமென்ற அவரது வேண்டுகோளையும் பரிந்துரை செய்தனர். சுல்தான் அப்துல்லா அதற்கு இசைந்து ஓர் ஆணை பிறப்பித்தார். அதன்படி பத்ராசலமும் ரேகபல்லியும் அவ்வாலயத்தின் செலவுக்கென ஜாகீராக வழங்கப்பட்டது ஒரு கற்பலகையில் பொறிக்கப்பட்டு, இன்றும் ஆலயத்தில் வைக்கப்பட்டுள்ளது.

சங்கீர்த்தன (பஜனை) கோஷ்டிகளில் அடிக்கடி பாடப்படும் இராமதாசரின் கீர்த்தனைளில் ஒன்று "இதிகோ பத்ராத்திரி கௌதமி அதிகோ சூடண்டி" என்று தொடங்குவது. வாராலி இராகத்தில் அமைத்துள்ள இதில் இராமதாசர் கூறுவதாவது:

> **"இதோ உள்ளது பத்ராசலம் என்கின்ற மலை; கோதாவரி இங்கே கரை புரண்டு ஓடுகிறாள். இங்குதான் ரகு குலத்து மக்கள் வாழ்கிறார்கள்; இராமனுக்கு இரு புறமும் சீதையும் இலக்குவனும் இதோ இருக்கிறார்கள்! இதுவே கலி யுக வைகுந்தம்! ஓ பக்தர்களே, கைகளைத் தலைமீது குவித்து வணங்குவீர்களாக! பூ நிறைந்த மரங்களும் செடிகளும் கொடிகளும் இந்த இடத்தை எவ்வளவு அழகு செய்கின்றன! இராமதாசனுக்கு அனைத்து போகங்களையும் அளித்துக் காக்கின்ற பகவானின் உறைவிடம் இதுவே!"**

தாசில்தார் பதவியினை மேற்கொள்வதற்காக பத்ராசலம் செல்லும் வழியில் இதனை அவர் பாடியதாகவும், நூற்றுக்கணக்கான இராம பக்தர்கள் அவரோடு சேர்ந்து பாடியதாகவும் நம்பப்படுகிறது. தாசில்தாராக மிகக் குறுகிய காலத்திலேயே மக்களின் நன்மதிப்பைப் பெற்றதோடு, நல்ல நிர்வாகி என மேலதிகாரிகளின் பாராட்டுதலையும் இராமதாசர் பெற்றார்.

எனினும் சுல்தானின் ஆட்சியில் மேற்கொள்ளப்பட்ட எல்லா நல்ல திட்டங்களும் ஸ்ரீ இராமரின் செயல்களாகவே இராமதாசருக்குப் பட்டன. ஒரு விழாவின் போது வேத விற்பன்னர்களுக்கு விருந்தொன்று அளித்தார் அவர். அப்பொழுது அவரது ஆண் மகவு கொதிக்கும் பாண்டத்துக்குள் விழுந்து மூர்ச்சையுற்றது. ஸ்ரீ இராமச்சந்திர மூர்த்தி அயோத்தியில் அரசுசெலுத்திய காலத்தில் ஒரு அந்தணர் தனது இறந்துபோன குழந்தையைக் கையிலேந்தி அவரிடம் சென்று

அக்குழந்தைக்கு உயிர்ப் பிச்சை பெற்றது இராமதாசருக்கு நினைவு வந்தது. அவ்வாறே தனது மகனைத் தூக்கிக்கொண்டு இராமரது ஆலயத்துக்குள் சென்று, இராமதாசர் "கோதண்ட ராமா" என்ற கீழ்வரும் பாடலைப் பாடினார்:

**" ஓ கோதண்டாராமா! தோல்வியறியாத வில்லை ஏந்தியவனே! உன்னைத் தவிர எங்களுக்கு வேறு ஆதரவு ஏது? பாராமுகம் ஏன் ஐயனே? கை கொடுத்து எங்களைத் தூக்கிவிட மாட்டாயா? ஒரு பாபமும் அறியாத எங்களது குழந்தையின் உயிரைக் காக்கமாட்டாயா? அவன் இப்படித் துவண்டு கிடக்கிறானே, அவனை எழுப்பி மீண்டும் விளையாடச் செய்யமாட்டாயா? உன் அருளைப் பொழிந்து, அவனுக்கு வந்துற்ற துன்பத்தைப் போக்க மாட்டாயா? நீ தானே எல்லோரையும் படைக்கிறாய், காக்கிறாய், வாழ்க்கையைப் பயனுள்ளதாக்குகிறாய்! நீயே எங்களுக்கு அனைத்துச் செல்வமுமாகிறாய்! உனது இள நகையில்தான் எங்களது இலட்சுமி இருக்கிறாள். பத்ராசலத்தை இருப்பிடமாகக் கொண்டவனே, உனக்கு ஏவல் செய்யும் எங்களைக் காப்பாற்று ஐயனே! ஓ ஜெயராமா, திருத் துழாய் அணிந்தவனே, பத்ரகிரியில் அமர்ந்த அண்ணலே, எங்களைக் காப்பாற்று!"**

இப்பிரார்த்தனையின் முடிவில் குழந்தை உறக்கத்திலிருந்து விழிப்பது போன்று எழுந்தது. இது முதற்கொண்டுதான் கோபண்ணா அனைவராலும் இராமதாசர் என ஆழைக்கப்பட்டார் போலும். அன்றுவரை பக்தர்கள் மட்டுமே அவ்வாறு அழைத்து வந்தனர். இந்த அதிசயத்துக்குப் பிறகு அவரது நீண்டநாட் கனவு ஒன்றும் பலித்தது. தமக்கு ஒரு நாள் கோபண்ணா ஆலயம் ஒன்று எழுப்புவார் என்று அக்கனவில் ஸ்ரீ இராமர் தெரிவித்திருந்தார். அது நிறைவேறும் காலம் வந்தது.

சாதகமாக ஒன்றுமே இல்லாத சூழ்நிலையில் அக்கனவினைச் செயற்படுத்துவது இராமதாசருக்கு எவ்வாறு சாத்தியமாயிற்று?

8, 9 ஆம் நூற்றாண்டில் கிழக்கு ஐரோப்பாவிலும், இங்கிலாந்தில் 17ஆம் நூற்றாண்டிலும் உருவ வழிபாட்டுக் கெதிரானதோர் இயக்கம் தோன்றியது. 16ஆம் நூற்றாண்டின் பின் பாதியில் தக்கணத்திலும் தென்னிந்தியாவிலும் உருவ வழிபாட்டை எதிர்ப்போர் பாமனி அரசின் பின் திரண்டு இந்துப் பேரரசாகிய விஜயநகர் மீது போர் தொடுத்து, இராட்சச தங்கடி (தலைக் கோட்டை) என்ற களத்தில் 1565இல் பெரும் வெற்றி பெற்று அந்நகரின் கோட்டை, அரண்மனை, ஆலயங்கள் போன்ற அனைத்தையும் தகர்த்துத் தரைமட்டமாக்கினர்.

தில்லியிலிருந்து முகலாயப் பேரரசரும், தக்கணத்தில் தௌலதாபாத்திலிருந்து முகலாய ஆளுநர் அவுரங்கசீப்பும் அச்சுறுத்திக்கொண்டிருந்தாலும் தெலுங்கு மொழி பேசிய தெலங்கானா, ஆந்திரத்தின் கடற்கரைப் பிரதேசம், இராயலசீமை ஆகியவற்றைக் குதுப் ஷாகி சுல்தான்கள் தங்களது ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வந்தனர். பாரசீகம், உருது ஆகியவற்றோடு தெலுங்கையும் நிர்வாக மொழியாக அவர்கள் கொண்டது, அரசுப் பணியில் இந்துக்களுக்கும் பங்கு அளித்தது, சமய விஷயத்தில் தலையிடாமை ஆகிய நல்ல கொள்கைகள் மக்களுக்கு ஒரு புதிய நம்பிக்கையை அளித்தன.

ஆனால் 1657இல், மீர் ஜூம்லா மீர்சா முகம்மது சையது தனது அரசுக்கெதிராக முகலாயர்களோடு சேர்ந்துகொண்டு சதி செய்ய ஆரம்பித்தார். அவரது போர் வெற்றிகள் அவரது தலைக்கேறி கனக்கச் செய்தன, கர்வம் அதிகரித்தது. உதயகிரி, கடற்கரைப் பிரதேசம், கண்டிக்கோட்டை, அடுத்திருந்த கர்னாடகப் பகுதி (இராயலசீமை) ஆகியவை அவரால் வெற்றி கொள்ளப்பட்டன: அங்கிருந்த ஆலயங்கள் கொள்ளையிடப்பட்டன: விக்கிரகங்கள் உடைக்கப்பட்டன: அவை உருக்கி பீரங்கிகள் வடிக்கப்பட்டன. முன்பு விசுவாசமாயிருந்த அக்கண்ணா, மாதண்ணா போன்ற பலரும் இப்பொழுது அவரை ஆதரிக்க முன்வரவில்லை. எனவே 1658இல் மீர்ஜூம்லா கோல்கொண்டாவை விடுத்து, ஏராளமான கொள்ளைப் பொருட்களையும் எடுத்துக்கொண்டு. சமய வெறியே உருக்கொண்டவரான பேரரசர் அவுரங்கசீப்போடு சேர்ந்துகொண்டார்.

இதற்கிடையில், இராமதாசர் என்று இப்பொழுது பரவலாக அழைக்கப்பட்ட கோபண்ணரும் அப்பகுதியிலிருந்த நிலப்பிரபுக்களில் பக்தி மிக்கோரும் மேலும் காலம் தாழ்த்தாமல் உடனே பத்ராசலத்தில் ஸ்ரீ இராமருக்கு ஆலயம் எழுப்ப வேண்டும் என்று அவசரப்பட்டனர். அவ்வாலயம் உயர்ந்த கோபுரங்களையும் சுற்று மதிலையும் திருக் குளத்தையும் கொண்டிருக்கவேண்டும். இராமதாசர் இதற்காக விடுத்த விண்ணப்பத்திற்கிணங்கி நிலப்பிரபுக்களும் குடியானவர்களும் கைவினைஞரும் முன்வந்து, ஆலயப் பணிக்கான பல விதப் பொருட்களையும் உடலுதவியையும் கொடுத்துதவினர். பிரதான தேவதை, உப தேவதைகள், பரிவார தேவதைகள் ஆகியவற்றுக்கான கோயில் கட்டுமானப் பணி முடிவுற்றது: நிதியும் தீர்ந்து போயிற்று. அதற்கு மேல் வேதமுறைப் படியும் சாத்திரங்கள் கூறும் படியும் சம்ப்ரோக்ஷணம்

செய்வதற்கும் ஆபரணங்கள் வாங்குவதற்கும் தேவையான நிதியில்லை. ஒரு நாளிரவு அரசாங்கக் கணக்குகளை முடித்துவிட்டு இராமதாசர் உறங்கச் சென்றார். அவரது கனவில் இறைவன் தோன்றி, வரி வசூலில் கையிருப்பில் உள்ள ஆறு இலட்சம் வராகனையும் மேற்கூறிய செலவுகளுக்காக எடுத்துக் கொள்ளுமாறு தெரிவித்தார். இராமதாசர் அவ்வாறே அத்தொகையினைக் கொண்டு திருப்பணிகளை முடித்து, சம்புரோக்ஷனமும் செய்து வைத்தார்.

போர்வெறி பிடித்த தளபதிகள் எல்லைப் புறங்களில் ஆலயங்களை அழித்தும் கொள்ளையிட்டும் விக்கிரங்களை உடைத்தும் வந்த நேரத்தில் குதுப் ஷாகி அரசின் மையப்பகுதியில் இவ்வாறு இராமபிரானுக்கு ஆலயம் ஒன்றினை எழுப்பித் தனது பிள்ளைப் பருவத்துக் கனவினைச் செயல் படுத்தினார் இராமதாசர். தக்கணத்தின் மத்தியில் இராமதாசர் எழுப்பிய ஆலயத்தில் தாரக மந்திரத்தை மக்களிடை பரப்பும் வகையில் இராமபிரான் பிராட்டி சீதாதேவியுடன் பிரதிஷ்டை செய்யப்பட்டார். இந்த மந்திரமே மக்கள் வாழ்க்கையாகிய துன்பக்கடலைக் கடப்பதற்குத் துணை நிற்கிறது. இராமதாசரது இப்பணியினால் இந்தியாவின் பண்டைய சனாதன தர்மம், பிற சமயங்களோடு கூட சமரசமாக இணைந்து வாழ்வதற்குப் புத்துயிர் ஊட்டப்பட்டது.

ஆனால் அரசின் நிதியை ஆண்டவனின் ஆணையைக் கேட்டு, உரிய அனுமதி பெறாமல் இவ்வாறு செலவிட்டதால், சுல்தானின் ஆணையின்படி இராமதாசர் சிறையிடப்பட்டார். அவரது மாமன்கள் கூட அவரைக் காப்பாற்ற முடியவில்லை. இராமபக்தி மேலிட்டு நேர்மையாகவும் பூரண நம்பிக்கையிலும் இராமதாசர் செய்த இச்செயலை அரசியல் நடைமுறையில் சுல்தானால் ஏற்க முடியவில்லை. உலக நடைமுறைக்கு மாறான அறிவுரையைத் தன் பக்தனுக்கு அளித்ததன் மூலம் ஆண்டவர் பக்தனைக் கொடிய சோதனைக்கு உள்ளாக்கினார். பன்னிரண்டாண்டு காலச் சிறைத் தண்டனையை இராமதாசர் அனுபவிக்க நேர்ந்தது (1665-1677).

சிறையிடப்பட்டதும் அவரது துக்கம் இராமபிரானுக்கு ஒரு முறையீடாகக் கீழ்வரும் பாடலில் வெளிப்பட்டது:

**"எ (ட்) டு போதிவோ இராமா"** **(இராகம் : ஆனந்த பைரவி)**

**" எங்கு சென்றனை இராமா, நீ எவ்விடம் சென்றனையோ?**
**உன் அருளுக்கு ஏங்கி நான் அழுகையிலே நீ எங்கு**
**சென்றனையோ?**

**உன் திருமுகம் தேடி என் கண்கள் ஏங்குகின்றனவே!**
**எங்கு சென்றனை இராமா...**
**இருள் வெஞ்சிறைப்பட்டு வாடுகின்றேன் நான்**
**இந்த அவமானம் நீ துடைக்கக் கோருகின்றேன் நான்**
**எங்கு சென்றனை இராமா...**
**பாவங்கள் துடைப்பவன் நீ யல்லவோ!**
**இத் துயரினின்று எனை மீட்க வேண்டுகின்றேனே!**
**எங்கு சென்றனை இராமா...**
**விசாரணை செய்து நீதி வழங்க தானிஷா வருவாரே.**
**கடன்பட்டநிதி தந்து என்னை மீட்க மாட்டாயா?**
**எங்கு சென்றனை இராமா...**
**புரிந்த குற்றம் உணர்ந்து உன்னைப் போற்றுகின்றேன் நான்**
**அருள் சொரிந்து மீட்க உன்னை வேண்டுகின்றேன் நான்**
**செய்த பாவம் பொறுத்துக் காக்கக் கோருகின்றேன் நான்**
**எங்கு சென்றனை இராமா...**
**கடன்காரர் தருந் தொல்லை தாங்க முடியவில்லை.**
**குற்றத்தில் பங்கு உண்டென மறைந்து கொண்டாயோ?**
**பத்ராசல இராமா. உலக நாயகனே. நீ யன்றோ**
**இராமாதாசனைக் காக்க வல்லவனே?**
**எங்கு சென்றனை இராமா...**

விசாரணைக்கு வருவார் என்று மேலே குறிப்பிடப்படும் தானிஷா இளவரசர் அபுல் ஹசனாகவே இருத்தல் வேண்டும். சுல்தான் அப்துல்லா குதுப் ஷாவின் மகளை 1660இல் மணந்ததிலிருந்து தனது மாமனாரின் பட்டத்து வாரிசாக இவர் நிர்வாகத்தில் பங்குகொண்டிருந்தார்.

பின்னர் மிக்க கலக்கமுற்றிருந்த மனதோடு கீழ்வருமாறு ஸ்ரீ இராமனுக்கு மற்றொரு கீர்த்தனையில் பிரார்த்தனை செய்கிறார் இராமதாசர்.

"ரக்ஷிம்பவிதியேமோ ராச்சகாரியமு புட்டே"

**நீ காக்க மாட்டாய். இது என்ன அரசியல் நெருக்கடியோ? ஓ இராமச்சந்திரா. நீ யல்லால் வேறு எவர் என்னைக் காப்பார்? கடன்காரர் சூழ்கின்றனரே இராமா. நான் என் செய்வேன்? உன் பிடியில் இருப்பதாக நான் நினைந்தேனே பரமா, எவரும் எனைக் கேட்கலாகாது என இருந்தேனே! கடையனினும் கடையனாகி விட்டேனை. ஓ இராமா! இராமதாசன் ஆகவே எவருக்கும் அஞ்சாதிருந்தேனே! ஓ இராமா. பத்ரிநாதா. எனதச்சத்தைப் போக்கியருளே!**

நீதிக்கும் நேர்மைக்கும் கடமையுணர்வுக்கும் பெயர் பெற்றிருந்த இராமதாசர் விசாரணைக்காக சுல்தானின் வாரிசாகிய தனாஷாவின்

(தானிஷா, தனஷா என இருவகையில் ஆங்கில மூலத்திலேயே உள்ளது.) முன் கொணர்ந்து நிறுத்தப்பட்டார்.

தனாஷா: உரியவரின் முன்னனுமதி பெறாமல் அரசின் பொருளைச் செலவிடுவது தவறு என்பதை நீர் அறியீரோ?

கோபண்ணா: ஸ்ரீ இராமரே எல்லோருக்கும் மேலானவர், அவருக்கே நான் பொருளைச் செலவழிக்கிறேன் என எண்ணினேன். இதனை அங்கீகரிப்பது உமக்கும் பெருமை தரும்.

தனாஷா: இன்னும் ஒரு வாரத்துக்குள் நீர் தொகையைச் செலுத்தாவிட்டால் மீண்டும் சிறையில் தள்ளப்படுவீர்.

தனாஷாவின் கேள்விகட்கு இராமதாசர் அளித்த பதில்கள் திமிரானவை, அகங்காரம் நிறைந்தவை எனக் கருதப்பட்டதால் எவ்விதமான கருணையுமின்றி அவர் பல விதமான கொடுமைகட்கும் உட்படுத்தப்பட்டார். கசையடி கொடுக்கப் பட்டது, பட்டினி போடப்பட்டார், அச்சுறுத்தப்பட்டார். ஆயினும் இராமரையே அப்பொழுதும் நினைந்து, பல கீர்த்தனங்கள் அவரால் இயற்றப்பட்டன. அவற்றுள் ஒன்று, இறைவனுக்கு அவர் தொகை செலவிட்ட விதத்தினை விவரிக்கிறது:

"இக்ஷ்வாகு குல திலகா இகனைன பலுகவே"

**இக்ஷ்வாகு குல திலகா, என் அறைகூவலுக்கு இன்னும் வாளாயிருப்பதேன்? நீயலால் எனைக் காப்பவர் யார், ஓ இராமச்சந்திரா? அழகிய நீள் மதிலை உன் ஆலயத்தில் நான் அமைத்தேன், பத்தாயிரம் வராகன் அதற்குச் செலவிட்டேன். உயர் கோபுரமும் மண்டபமும் பல அமைத்தேனே, அந்நியனாய் எனைப் பார்க்க வேண்டாமே! பரதாழ்வாருக்கு மரகதப் பதக்கம் செய்தேன், பத்தாயிரம் வாராகன் அதற்குச் செலவிட்டேன். சத்ருக்கனருக்கு மணிக்கச்சை செய்தேன், பத்தாயிரம் மோகர் அதற்குச் செலவிட்டேன். இலக்குவனுக்கொரு பதக்கம் பண்ணினேன், அதற்கும் ஒரு பத்தாயிரம் செலவழித்தேன். அன்னை சீதைக்கும் பதக்கமொன்று செய்தேன், புளியனிலை வடிவில் அதனை அமைத்தேன், ஆயிரம் வராகன் அதற்கும் ஆயிற்று. அழகுயர் இரதங்கள் பல உனக்கும் செய்தேன், எனக்கு நீயளித்ததோ கால் விலங்கு மட்டுமே! அலங்கார கிரீடமும் உனக்கென நான் தந்தேன்! பெருமை பாராட்டாதே இராமா, யார் தந்தையின் சொத்து அது?**

ஸ்ரீ இராமரின் மீது எல்லையற்ற நம்பிக்கை அவருக்கு இருந்தது. இராமருக்காகப் பெரும் பொருள் செலவு செய்தார் அவர். எனவே இராமர் தன்னைக் கைவிடமாட்டார் என்றும் தொகையினை ஈடுசெய்யத் துணைபுரிவார் என்றும் உறுதியாக நம்பினார். இவ்வளவு சோதனைகளுக்குப் பின்னரும் அவரது இராம பக்தி சிறிதும் குன்றவில்லை. அவ்வப்பொழுது மனத் தளர்ச்சியும் சோர்வும் ஏற்பட்டாலும் இராமபிரான் மீதான அவரது நம்பிக்கை பழுதுபடவில்லை. இராமரோடு விவாதங்களிலும் அவர் சில சமயம் ஈடுபட்டார்:

**'ராமா நீசேதேமி காதுகா"**

**"ஓ இராமா, உன்னால் எதையுமே செய்ய முடியவில்லையே! ஆனால் சீதாப்பிராட்டியிடம் கூடவா சொல்ல முடியவில்லை? சாதாரண ஜனங்கள் கூட அல்லவா என்னைச் சித்திரவதை செய்கிறார்கள்! நீயோ நான் சொல்வதற்குச் செவி சாய்க்கமாட்டேன் என்கிறாய், முகத்தையும் காட்டமாட்டாய். உனது பராக்கிரமமெல்லாம் பெருங் கடலில் மூழ்கிப் போனதோ? உன்னுடைய பக்தன் பணத்துக்காக வதைக்கப்படுங்கால் உன் வீரியமெல்லாம் எங்கேதான் போயின? பாஞ்சசன்யத்தையும் சக்கரத்தையும் அல்லவா நீ தரித்துக் கொண்டிருக்கிறாய், உனது பக்தனை மட்டும் ஏன் காக்கமுடியவில்லை? தாமரைக் கண்ணா, உதவாக்கரைகள் கூட என்னைத் திகிலுறச்செய்கிறார்களே, உன் கருணை என்னவாயிற்று? நீயே எனது குல தெய்வம், நின்னைத் தவிர வேறு தெய்வம் இல்லை என இருந்தேனே! எனது கடன்களைத் திருப்பிச் செலுத்துமாறு உன்னை நான் வேண்டும் போது என்னை விட்டு ஏன் விலகி நிற்கிறாய்?"**

இதே போல் அன்னை சீதா தேவியிடமும் இராமதாசர் சில நேரங்களில் முறையிடுகிறார்.

**"ஜனக தனயா"**

**" ஓ ஜனக ராஜன் மகளே, இதோ என் இந்தப் பிரார்த்தனையைப பிரபஞ்சங்களுக்கெல்லாம் பிதாவாகிய ஸ்ரீ இராமனிடம் தெரிவிப்பாய்! பன்னிரண்டு ஆண்டு காலமாகப் பொறுக்க இயலாத இன்னல்களை எல்லாம் இரவும் பகலும் நான் பொறுத்து வந்துள்ளேள்; பல முறையும் உன்னை நான் பரவித் துதித்து வந்துள்ளேன்; ஆனால் பாராமுகமாகவே இருக்கிறாய் நீ! மேலும் தாமதிக்காமல் பணத்தைக் கொணர்ந்து கடனிலிருந்து என்னை மீட்பாயாக! இந்த இம்சையை இனியும் பொறுக்க முடியாது உயிரை விட்டு உன்னையே அடைய நினைக்கிறேன்!"**

பன்னிரண்டாண்டு சிறைவாசத்தின் கடைசி வாரத்தில், கீழ் வருமாறு மற்றொரு கீர்த்தனையை இராமதாசர் பாடினார்:

"முச்சடைனா ஆடவேமிரா"

"ஈடில்லாத காண்டீபத்தை ஏந்தினவனே, என்னோடு நெருங்கிப் பேசமாட்டாயா? நான் இச் சிறையினுள் பிரவேசித்துப் பன்னிரண்டாண்டுகள் ஆகின்றனவே. முட்டைப் பூச்சிகளும் கொசுக்களும் என் இரத்தத்தை உறிஞ்சி என் உடம்பை ஓடாக்கிவிட்டன. சித்திரை, வைகாசியின் வெய்யில் கொடுமையினை வர்ணிக்கவொண்ணாது. ஜாமீன் நின்று என்னை வெளிக் கொணர்வார் எவரும் இல்லை. வரவு செலவுக் கணக்குப் பார்க்க தனாஷா வரப்போகிறர். நான் செலவிட்ட பணத்தை அனுப்பித் தந்து என் விடுதலைக்கு வழிசெய்ய மாட்டாயா?"

இக் கீர்த்தனை 1677இல் புனையப்பெற்றது ஆதலால் இதில் கூறப்படும் தனாஷா என்பவர் கடைசி சுல்தானாகிய அப்துல் ஹசன் தனாஷாவே. வாரிசுரிமைப் போரில் மாதண்ணா மற்றும் அக்கண்ணாவின் உதவியோடு வெற்றி பெற்று தனது மாமனாருக்குப் பின் பட்டமேறியிருந்தார் இவர். இதனால் அவ்விருவரையும் தனது முதலமைச்சராகவும் செயலராகவும் இவர் பதவி உயர்வு செய்திருந்தார். இச் சூழ்நிலை இராமதாசரின் விடுதலைக்குச் சாதகமாயிருந்தது.

தனது மைத்துனரான கோபண்ணா இறைவன் பொருட்டே பணத்தைச் செலவு செய்தாராததால் அவரை மன்னித்து விடுவித்துவிடலாம் என்று முதலமைச்சரான மாதண்ணா, சுல்தானுக்குப் பரிந்துரை செய்து அவரது விடுதலைக்குக் காரணமாயிருந்திருக்கலாம் என்று ஆருத்ராவும் வேங்கடராய சாஸ்திரியும் எழுதுகின்றனர். இது பொருத்தமான கூற்றாகவே தோன்றுகின்றது.

டச்சுக் கிழக்கிந்தியக் கம்பெனியைச் சேர்ந்த ஹவார்ட், மார்ட்டின் என்ற இருவரும் 17 ஆம் நூற்றாண்டில் கீழ்வருமாறு எழுதினர்

"அவரை பத்ராசலம் தாசில்தாராக அரசாங்கம் நியமித்திருந்தது. ஆண்டவன் ஸ்ரீ இராமச்சந்திரனின் தீவிர பக்தர் அவர். அரசாங்க கஜானாவிலிருந்து பெரும் பணத்தை அவர் எடுத்து, தனது ஆண்டவனுக்கு அழகிய ஆலயம் ஒன்றினை அவர் கட்டினார். ஸ்ரீ இராமர், அவரது தேவி, அவரது தம்பிகள் ஆகியோருக்குப் பொன்னாலும் மணியாலும் விலையுயர்ந்த ஆபரணங்கள் செய்வதிலும் நிறைய செலவு செய்தார் அனுமதியின்றிப் பொதுப் பணத்தைக் கையாடிச் செலவிட்டதற்காக அரசாங்கம் அவரைச் சிறையிட்டுச்

**சித்திரவதை செய்தது. 'ஸ்ரீ இராமன் அப்பணத்தைத் திருப்பிச் செலுத்திய பின் கோபண்ணர் விடுதலை செய்யப்பட்டார்."**

மாதண்ணாவைப் பற்றி அவதூறாக எழுதுவதையே வழக்கமாகக் கொண்டிருந்தனர் ஹவார்ட்டும் மார்ட்டினும். எனவே கோபண்ணாவின் விடுதலையில் மாதண்ணாவின் பங்கு குறித்து அவர்கள் ஒன்றும் குறிப்பிடவில்லை. ஆண்டவனின் தலையீடே அவரின் விடுதலைக்கு ஒரே காரணம் என்று அவர்கள் எழுதினர்.

பண்டைய ஆந்திர எழுத்தாளர்கள் அனைவருமே இந்த அந்நிய எழுத்தாளர்களின் கூற்றினை அப்படியே ஏற்றுக்கொண்டு விட்டனர். ஆனால் யக்ஷகான ஆசிரியர்களோ இராமன், இலக்குவன் ஆகியோரே பணியாட்கள் உருவில் வந்து, அரண்மனையில் தனாஷாவைச் சந்தித்து ஆறு இலட்சம் வராகனைத் தந்து, அதற்கென அரசு முத்திரை பதித்த இரசீதையும் பெற்றுக்கொண்டு, இராமதாசரின் விடுதலைக்குக் காரணமாயிருந்தனர் என்று பாடினர்.

தனது விடுதலைக்குப் பிறகு, 1677இல பத்ராசலத்தையும் ரேகபல்லியையும் ஸ்ரீ இராமன் ஆலயத்துக்கென நிரந்தர ஜாகீர்களாக இராமதாசர் பெற்றார்; மேலும், நித்திய பூஜைக்காக முன்பு 1652இல் வழங்கப்பட்டிருந்த ஆணையையும் சுல்தான் மீண்டும் புதுப்பிக்குமாறு இராமதாசர் செய்தார்.

ஆனால் இந்த அமைதியும் இணக்கமும் கலந்த சூழல் பத்தாண்டுகள் மட்டுமே நீடித்தது. எனினும் ஷியாவும் சூஃபியுமான குதுப் ஷாகி சுல்தான் அபுல் ஹசனுக்கு எதிராகச் சமய வெறி பிடித்த முகலாயப் பேரரசர் அவுரங்கசீப் தொடர்ந்து சதி செய்துவந்தார். ஆசை காட்டியும் இலஞ்சம் தந்தும் பல கோல்கொண்டா அதிகாரிகளைத் தன் பக்கம் அவர் ஈர்த்துக்கொண்டார். சுல்தான் தனது இந்தக் குடிகளை நன் முறையில் நடத்தியதும் இந்துவாகிய மாதண்ணாவை அவர் தனது முதலமைச்சராகக் கொண்டிருந்ததும் அவுரங்கசீபுக்குப் பிடிக்கவில்லை. 1686இல் அவுரங்கசீப்பின் கையாட்கள் அக்கண்ணாவையும் மாதண்ணாவையும் கொலை செய்வித்தார்கள்; அடுத்த ஆண்டில் கோல்கொண்டாவையும் அவுரங்கசீப் கைப்பற்றினார்; சுல்தான் அபுல் ஹசன் தனாஷா சிறையில் தள்ளப்பட்டார்; குதுப் ஷாகி ஆட்சி முடிவுக்கு வந்தது.

தனது பிள்ளைப் பருவக் கனவின் நிறைவாக ஸ்ரீ இராமர் ஆலயத்தை இராமதாசர் அமைத்து முடித்துவிட்டார்: 12 வருட சிறை வாசமும் அவ்வருக்கு நற்பெயர் தந்து நன்முறையில் முடிவுற்றது. குதுப் ஷாகி அரசும் வீழ்ந்துவிட்டது. பரம பதம் அடையவே அடுத்து அவர் ஆசைப்பட்டார். அந்த ஆசையும் உடனே கைகூடிற்று எனப் பௌராணிகர்கள் தெரிவிக்கின்றனர்.

இந்நிகழ்ச்சிகளுக்குப் பின்னர் நூறாண்டுகள் கழிந்த பின், அதாவது 1760இல் பத்ராசலம் ஆசப்ஜாகி வம்சத்தைச் சேர்ந்த நைசாம்களின் கீழ் ஐதராபாத் ர்ராஜ்யத்தின் ஓர் அங்கமாக ஆயிற்று 1766இல் நைசாமின் விருப்பத்துக்கு எதிராக இப்ராகிம் கான் என்றும் தன்சா (Dhansa) என்றும் அழைக்கப்பட்ட ஒரு தளபதி ஸ்ரீ இராமர் ஆலயத்தைச் சூறையிட விரும்பினான். அதனை அறிந்த ஆலயத்தின் புரோகிதர்கள் விக்கிரகங்களை எடுத்துச் சென்று, கோதாவரி நதிக் கரையில் போலவரம் தாலுக்காவிலுள்ள சந்தமாமில்லா என்னும் கிராமத்தில் ஐந்து ஆண்டு காலம் ஒளித்து வைத்திருந்தனர். இப்ராகிம் கான் பத்ராசலம் சென்று, ஸ்ரீ இராமர் ஆலயத்துக்கு தனாஷா முதன்முதலில் அளித்த மானியம் பற்றிய கல்வெட்டை மட்டும் கற்பலகையின் மீதிருந்து அழித்துவிட்டதாகத் தெரிகிறது.

இந்த குற்றத்துக்காக நைசாம் அவர்களால் முறைப்படி இப்ராகிம் கான் தண்டிக்கப்பட்டார் என்பதை நாம் மறக்கலாகாது. மேலும், விக்கிரகங்கள் மீண்டும் கொண்டுவரப்பட்டு பிரதிஷ்டை செய்யப்பட்ட போது ஆலயத்தில் திருப்பணிக்காகவும் நித்திய பூஜைகளை மறுபடியும் நடத்துவதற்காகவும் நைசாம் ரூபாய் 40,000 அளித்தார்.

1832ஆம் ஆண்டு வாக்கில், குண்டூர் தூமு நரசிம்மதாசரும் காஞ்சி வரத ராமதாசரும் பத்ராசலம் சென்றனர். அவர்கள் நைசாம் நசரதுல்லாவின் ஆலோசகர்களில் ஒருவரான சந்துலால் என்பவரிடம் பேசி, 1677இல் சுல்தான் அபுல் ஹசன் தனாஷா வெளியிட்ட ஆணையை மீண்டும் கல்லில் பொறிக்கச் செய்து வெளியிட ஏற்பாடு செய்தனர்.

அன்று தொடங்கி, ஆண்டு தோறும் நடைபெறும் சீதா - இராமர் கல்யாண உற்சவத்தின் பொழுது ஒரு தட்டில் முத்துக்களை அனுப்பி மரியாதை செய்வது நைசாம்களின் வழக்கமாக இருந்துவந்தது. இப்பொழுதும் ஆந்திரப் பிரதேச அரசு இதைத் தொடர்ந்து செய்து-வருகிறது.

"இங்கு தெய்வ நம்பிக்கை என்பது வெற்று நம்பிக்கை மட்டுமல்ல: அது மனதுக்கும் அனைத்து சமயங்களுக்கும் ஏற்புடைய ஒன்று. இதைத் தான் இராமதாசரது வரலாற்றின் மூலமாகவும் பத்ராசலத்தில் அவர் எழுப்பிய ஆலயத்தின் மூலமாகவும் நாம் அறிந்துகொள்கிறோம்." அங்குதான் இராமதாசர். கபீர்தாஸ் என்கிற ஒரு முஸ்லிம் ஞானியினால் "இராம தாரகம்" என்கிற மந்திரத்தை போதிக்கப் பெற்றார். இந்த முக்கிய நிகழ்ச்சியினை இராமதாசரே தனது ஒரு கீர்த்தனையின் வாயிலாக நமக்குத் தெரிவிக்கிறார். இந்த நிகழ்ச்சியின் மூலம், "பரம்பொருளிடம் பக்தி என்பதை அனைத்து சமயங்களுக்கும் பொதுவான தொன்றாக ஆக்கிவிட்ட தலம் பத்ராசலம்; இப் புண்ணியத் தலம் மனித குலத்தின் ஒருமைப் பாட்டினைச் சுட்டிக் காட்டுகிறது: அனைத்துக்கும் மேலான பரம்பொருளும் ஒன்றே என்பதையும் இவ்விடம் உணர்த்துகிறது." என்று எழுதினார் மறைந்த மேதை டாக்டர் இராதாகிருஷ்ணன்.

# மக்கள் கவிஞரும் இசைக் கலைஞரும்

தனது ஐந்தாம் வயதிலேயே கவி புனைந்த மாமேதை என இராமதாசரைப் புகழ்கின்றனர் யக்ஷகான ஆசிரியர்கள். அன்று தொட்டு, இறைவன் இராமபிரான் மீது அவர் கொண்டிருந்த எல்லையற்ற பக்திக்கு ஒரு வடிகாலாக அவரது கவிதையும் இசையும் இலங்கின. பல்வேறு வகைச் செய்யுள் வடிவங்களைக் கற்றுக்கொள்வதற்கும் கையாள்வதற்கும் அவருக்கு நிறைய வாய்ப்புகள் இருந்திருக்க வேண்டும். ஆனால் அவற்றில் இரண்டு மட்டுமே இன்று நமக்குக் கிடைக்கின்றன. ஒன்று, தாசரதி சதகம்: தாசரதி மீதான புகழ் மாலையும் விண்ணப்பங்களும் அடங்கிய நூறு பாசுரங்கள் இதில் உள்ளன: மற்றது, கீர்த்தனங்கள்: ஒரே மாதிரியான யாப்புமுறையையும் பக்தியாகிய ஒரே கருப்பொருளையும் கொண்ட நூற்றுக்கணக்கான படைப்புகள் இவை. தாசரதி சதகமும் கீர்த்தனங்களும் அவற்றின் இனிமை சொட்டும் வரிகளாலும் பாக்களாலும் போதனருக்கும் (Potana) வேமனருக்கும் (Vemana) இணையான பெருங் கீர்த்தனாசிரியர்கள் வரிசையில் இராமதாசரை அமர்த்தியுள்ளன. இக் கீர்த்தனாசிரியர்களின் நெஞ்சை அள்ளும் இசைப் பிரவாகம் தலைமுறை தலைமுறையாக அனைத்து வகுப்பு ஆந்திர மக்களையும் கவர்ந்து ஈர்த்ததோடு, தெலுங்கு மொழியையும் வளப்படுத்திற்று. இக்காரணமாகவே இராமதாசரும் சிறந்ததொரு மக்கட் கவிஞராகவும் இசைமேதையாகவும் மதிக்கப்பெறுகிறார்.

சதகம் பாடுவதை "செய்யுள் யாக்கும் ஒரு ஆரம்ப கட்டப் பயிற்சி" என இளம் புலவர்கள் கருதுவர்: மூத்த புலவர்களோ, இஷ்ட தெய்வத்திடம் தனது பக்தியையும் சரணத்தையும் வெளிப்படுத்துகின்ற அல்லது தனது பாவங்களுக்குக் கழுவாய் தேடுகின்றவகையில் புனையப்பட்ட பாமாலை வடிவம் என அதனை வருணிக்கின்றனர். பொதுவாக, சதகத்திலுள்ள செய்யுட்கள் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத தனித்தனிப் பாடல்களே. அதன் புலவர் தனது சொந்த உணர்வுகளையும் தனது சமுதாய அனுபவங்களையும், இறைவனின் மீதான தனது ஈடுபாட்டினையும் புகழ்ச்சியையும், மனித ஒழுக்கம் பற்றிய கருத்துகளையும் சதகத்தில் வெளியிடுவார். தன்வயநிலைச் செய்யுட்கள் எனச் சதகம் கருதப்படுகிறது. சில சதகங்கள் பல வகையான சீர்,

தளைகளைக் கொண்டுள்ளன. தாசரதி சதகமோ உத்பலமாலா, சம்பகமாலா போன்ற ஒன்று அல்லது இரண்டு வகையினை மட்டுமே கொண்டுள்ளது. சாதாரணமாக சதகத்தில் 100 அல்லது 108 செய்யுட்களே இருக்கும். ஏதோ சிலவற்றில் இது மாறியுள்ளது. உதாரணமாக பர்த்ருகரியின் "சுபஷிதம்" என்கிற சதகம் (இது சமஸ்கிருதத்தில் எழுதப்பட்டு தெலுங்கில் மொழிபெயர்க்கப்பட்டது), ஒவ்வொரு நூறும் சஞ்சன பத்ததி, துர்ஜன பத்ததி போன்ற ஒரு பத்ததியாக, பல நூறு செய்யுட்களைக் கொண்டதாக உள்ளது. தாசரதி சதகம் போன்ற சில சதகங்கள் ஒவ்வொன்றும் பத்து செய்யுட்களைக் கொண்ட பத்து தசகங்களைக் கொண்டுள்ளன. ஒவ்வொரு தசகமும் ஒரு பொருளைப் பற்றியதாக இருக்கும்.

தாசரதி சதகத்தில் இராமதரசர் தாசரதியாகிய (இராமபிரான்) தனது இறைவனோடு உரையாடுவதாக ஒவ்வொரு செய்யுளும் அமைந்துள்ளது. அவர் தாசரதியிடம் ஆழ்ந்த பக்தி செலுத்தி, அவரையே சரணடைவதாகச் செய்யுட்கள் அமைந்துள்ளன. கீழ்வரும் பகுதிகளாக அச்செய்யுட்களை நாம் பகுக்கலாம்:

1. நாமாவளி: இறைவனது பற்பல திருநாமங்களையும் குணங்களையும் கூறி அவனை விளிக்கும் பகுதி.
2. ஜீவான்மாவுக்கும் பரமாத்மாவுக்குமான உறவு பற்றிய சூட்சும உண்மைகளை எடுத்தியம்பும் பகுதி.
3. திருமால் தமது பல்வேறு அவதாரங்களிலும் செய்து காட்டிய சாதனைகளைப் புகழ்ந்து பாடும் பகுதி.
4. சாதாரண எளிய மக்களுக்கென நீதிகளை எடுத்தியம்பும் பகுதி.
5. பக்தனாகிய கவிஞன் தனது சொந்த வாழ்க்கை அனுபவத்தில் செய்துவிட்ட குற்றங்களையும் குறைகளையும் எடுத்துக் கூறிக் கழுவாய் தேடும் பகுதி.
6. இறைவன் செய்துவிட்டதாக உலகம் கருதும் "பிழையான செயல்களைக்" குறிப்பிட்டு, உண்மையில் அவனைப் புகழும் நோக்கோடு, நகைச்சுவையுடன் பாடும் செய்யுட்கள்.

மேற்படி கருத்துகள் அடங்கிய சில மாதிரிப் பாக்களைக் கோபண்ணாவின் தாசரதி சதகத்திலிருந்து இப்பொழுது நாம் ஆராயலாம். இவற்றில் ஆண்டவனின் திருவுருவ மகிமையையும் அவனது நாமத்தினை உச்சரிப்பதால் ஏற்படும் சுகத்தையும் அவர் விவரிக்கிறார்:

"சக்கர லப்பகுன்"

**கருப்பஞ் சாற்றின் இனிமைக்கும், இளம் பெண்களின் மலரிதழ் போன்ற சிவந்த இதழ்களுக்கும், புதிதாக எடுக்கப்பட்ட தேனுக்கும் அடிமைப் பட்டுப் போனவனால் இராம நாமத்தை உச்சரிப்பதில் உள்ள சுகத்தை எப்படி உணர முடியும்? இராம நாமத்துக்கு இணையான இனிமை வேறு எதில் இருக்கிறது? தாசரதீ, அருட்கடலே, உன்னைக் காட்டிலும் இனிமையான வடிவத்தை வேறு எங்கேகாணமுடியும்!**

"சிக்கனி பலப்பை"

**ஓ தாசரதீ, அருட் புனலே! முன்பு நான் கொதிக்கும் பாலின் தடித்த ஆடையையும் வெல்லப் பாகையும் அல்லவா இனியவை என்று ஆர்வத்துடன் உண்டுவந்தேன்? என்ன அறிவீனம் அது! தேவாம்ருதத்தை விடவும் இனிக்கின்ற உனது வடிவழகை எனது இரு கரங்களையும் சேர்த்துப் பணிவோடு இப்பொழுது அள்ளிப் பருகுகிறேனே, இது அல்லவோ இணையற்று தித்திக்கிறது!**

முன்பு கோல்கொண்டாவில் சில செல்வந்தர்களையும் உயர் அதிகாரிகளையும் புகழ்ந்து தான் பாடியிருந்ததை இங்கே இராமதாசர் குறிப்பாக உணர்த்துகின்றார். அப்பொழுது அவர் பலருக்குக் கீழ்ப்பட்ட ஒரு சிறு அதிகாரியாக இருந்தார். அது பற்றிய மேலும் இரண்டு செய்யுட்களை இப்போழுது பார்க்கலாம்.

"மாச கோனி ரேகு பண்டவகுனு"

**முன்னொரு நாள் கவிதையை ஒரு இழிவான மனிதனுக்குப் படைத்தேன்; அழுகிப்போன பழங்களுக்கு முத்துக்களை விலையாகக் கொடுத்ததைப் போல, ஆசையே இதற்குக் காரணம். ஏமாற்றம் தான் விளைந்தது.**

**ஆனால் இப்பொழுது! ஓ தாசரதீ, அருட் கடலே, எனது கவிதையாகிய மேடையிலே ஆனந்தமாய் நடனமாடுவாயாக! என் நாவில் தெவிட்டாத அமிழ்தத்தை நீ வார்ப்பாயாக, கான மழை பொழிவதற்காக!**

மேலே குறிப்பிடப்படும் அந்தப் பெரிய மனிதர், கோபண்ணாவுக்குத் தாசில்தார் பதவி வழங்கிய முதலமைச்சர் மீர்ஜும்லாவாகவே இருக்க வேண்டும். அந்த மீர்ஜும்லா பிறகாலத்தில் கோல்கொண்டா சுல்தானைக் கைவிட்டு, அவருக்கு எதிராக முகலாயர்களோடு சேர்ந்து கொண்டதைத்தான் தனக்கு விளைந்த பெரும் ஏமாற்றமாக இராமதாசர் குறிப்பிடுகிறார்

இதே போல மற்றொரு செய்யுளிலும் இராமதாசர் கூறுகின்றார்.

**"சேசிதி கோரா கிருத்யமுலு"**

**வெறுக்கத்தக்க செயல்களை நான் புரிந்துள்ளேன். ஆண்டவனின் பக்தர்களுக்கு அவமரியாதை செய்துள்ளேன்; அந்நியக் கடவுளை வணங்கியவர்களோடு நான் நெருங்கிப் பழகி விட்டேன். ஓ தாசரதீ. அருட் கடலே, எனது தவறுகளை மனதில் கொண்டு என்னைத் தண்டித்து விடாதே! நான் உன்னுடைய தாசன் என்பதை மறந்துவிடாதே!**

மேலே கூறப்பட்ட "வெறுக்கத்தக்க செயல்கள்" கோபண்ணா அரசாங்க அதிகாரியாக இருந்த காலத்தில் மேற்கொண்ட தவிர்க்க இயலாத சில நடவடிக்கைகளைக் குறிக்கிறது போலும். தனக்கு அவை ஏற்புடையனவாக இல்லாமற்போயினும், தனது மேலதிகாரிகள் போன்றோரின் கட்டாயத்துக்காக அவற்றை கோபண்ணா எடுக்க வேண்டியிருந்திருக்க வேண்டும். அத்தகைய செயல்களுக்காகவும் தனது குறைபாடுகளுக்காகவும் இப்பொழுது கழுவாய் தேட இராமதாசர் விரும்பி, ஆண்டவனின் அருளை வேண்டுகிறார். அரசின் செல்வத்தைக் கையாடல் செய்துவிட்டதாக கோல்கொண்டா அரசும் மக்களும் தன் மீது பழி சுமத்துவதை நினைந்து தான் படும் வேதனையைக் கீழ் வரும் பாடலில் அவர் வெளிப்படுத்துகிறார்:

**"ஈதடு துராத்முடஞ்சு ஜனுலென்னக"**

**எல்லோரும் என்னைத் துன்மார்க்கன் என நிந்தித்த போது மன நிம்மதி இழந்த நான், என்னை நிராதரவானவன் என்று தவறாக அல்லவா கூறிக்கொண்டேன்! ஓ தாசரதீ, ஆதரவற்ற ஆத்மாக்களைக் காப்பவன் நீ யிருக்கப் பிறரை நான் ஏன் கெஞ்சவேண்டும்? இந்த ஜென்மத்தில் மட்டுமென்ன, மறு ஜென்மத்திலும் நீ என்னைக் காக்க மாட்டாயா என்ன! நீ கருணா மூர்த்தியாயிற்றே, ஓ தாசரதீ, ஈடில்லாத இரண்டெழுத்தாகிய ராம நாமத்தை என் மனத்தில் என்றென்றும் நிறுத்தி உன்னை சதா பாடிப் பணிகின்றேனே எனக்கு நிம்மதி அளிப்பாயாக!**

கோல்கொண்டா அரசில் பணியாற்றிய இராமதாசரோடு தொடர்புள்ள சில பெரிய புள்ளிகள் பற்றிய நிகழ்ச்சிகளைச் சுட்டுகின்ற ஒரு பாடலையும் நாம் பார்க்கின்றோம். அவர்கள் வரலாற்று பூர்வமானவர்கள் என்பதையும் அவை நிகழ்ந்த காலத்தில் இராமதாசர் இருந்தார் என்பதையும் இது மெய்ப்பிக்கின்றது.

"தொரசினா காயம் முதிமி தோச்சின ஜுஂச்சி"

மனித உடல்கள் முதுமையுற்றுத் தளர்ந்து போவதையும்,

**அரசரும் பிரபுக்களும் கூட மின்னி மறைந்து போவதையும், உறவினரும் நண்பரும் நமக்கு முன்னேயே மாண்டு போவதையும் கண்கூடாகக் கண்ட பின்னரும் கூட, வாழ்நாட்கள் திடீர் திடீரென முறிந்து போவதற்கான காரணத்தை அறியமாட்டாமல் ஆசைகளிலும் இன்பங்களிலும் மனிதன் பற்று கொண்டு அலைகிறானே. கருணை வெள்ளமாகிய ஓ தாசரதீ, அவனுக்கு விமோசனம் தான் ஏது?**

தனது முதுமையையும் கோல்கொண்டா அரசின் வீழ்ச்சியையும் அக்கண்ணா, மாதண்ணா, ருஸ்தம்ராவ் (கோபண்ணாவின் ஒன்றுவிட்ட சகோதரர்) ஆகியோர் கொலையுண்டதையும், இறுதியாக நல்லாட்சி செலுத்திய சுல்தான் தனாஷா முகலாயரின் சிறையில் கிடந்து வாடி மரணத்தைத் தழுவ நேர்ந்ததையும் தாம் இச் செய்யுளில் இராமதாசர் குறிப்பிடுகிறார்.

இராமதாசரின் பக்தி தூய்மையானது. இராம பிரானது அளப்பரிய கீர்த்தியை அனுபவத்தின் வாயிலாகத் தான் உணர்ந்ததை அவர் முழுக்க முழுக்கப் புகழ்ந்து பாடுகிறார். பத்து பாடல்களில் திருமாலின் தசாவதாரங்களையும் வருணிக்கிறார். எதுகை மோனை உவமை அணிகள் போல்வன இப் பாடல்களில் தானே வந்து எவ்வித முயற்சியும் இன்றிக் கொட்டுகின்றன. தனது புலமையையும் படிப்பையும் காட்டுவதற்கு இராமதாசர் சிரமப் படாமலேயே அவை தாமே வந்து வெளிப்படுகின்றன.

"தெளிவு, இனிமை, எளிமை, பக்தியின் ஆழம் ஆகியவற்றில் தாசரதீ சதகத்துக்கு ஒப்பாக வேறு எந்த சதகத்தையும் நாம் குறிப்பிட முடியாது. ஆந்திர நாட்டில் மக்கள் மத்தியில் இந்த சதகத்தக்கு இருக்கும் செல்வாக்குக்கு இந்த அம்சங்களே காரணமாகும்."

இராமதாசர் ஒரு கவியாகவும் இசை மேதையாகவும் விளங்கினார் என்பது உண்மை. ஆனால் இதற்கும் மேலாக இராமாவதாரத்தில் அளவற்ற ஈடுபாடு கொண்ட மாபெரும் வைணவராக அவர் திகழ்ந்தார். தக்கணத்திலும் தென்னிந்தியாவிலும் 17ஆம் நூற்றாண்டானது இசையிலும் நாடகத்திலும் கீர்த்தியோடு விளங்கிய பொற்காலம் என கொண்டாடப்படுகிறது. அந்தக் காலத்தில்தான் இராமதாசர் மட்டுமின்றி நாரயண தீர்த்தர், க்ஷேத்ரய்யா ஆகிய மேலும் இரண்டு சங்கீத கர்த்தாக்களும் தோன்றினர்.

குச்சிப்புடி சித்தேந்திர யோகி அவர்கள் - இவர் 15ஆம் நூற்றண்டின் கடைசியில் வாழ்ந்தவர் என்று பி.எஸ்.ஆர் அப்பா ராவ் கருதுகிறார் - தனது " பாமா கலாபம்" என்ற நாட்டிய நாடகத்தில் "மத்வதி பத்ராதி ராமு" என்று ஒரு கீர்த்தனையில் பாடுகிறார். அந்த நூற்றாண்டில் பத்ராசலம் ஜாகீரைத் தில்லி சுல்தான்களிடமிருந்து பெற்று அன்னப்ப ரகூத் என்ற ஒருவர் அனுபவித்து வந்தார். அப்பொழுதே அங்கிருந்த இராமர் ஆலயம் பிரசித்தி பெற்று, அங்கு வந்த சித்தேந்திர யோகியால் பாடப்பட்டது தெரிகிறது. நாரயணதீர்த்தர் பல்வேறு தலங்களையும் சென்று தரிசித்து. அவற்றில் பலவற்றின் பெயர்களையும் அவற்றில் எழுந்தருளியுள்ள இறைவனின் பெயர்களையும் தனது "கிருஷ்ண லீலா தரங்கினி"யின் பல பாடல்களில் குறிப்பிட்டுப் பாடியுள்ளார். ஆனால் பத்ராசலத்துக்கு அவர் செல்லவில்லை.

ஆயினும் க்ஷேத்ரய்யா 1650ஆம் ஆண்டு வாக்கில் கோல்கொண்டா அரசவைக்கும் பத்ராசலத்துக்கும் விஜயம் செய்துள்ளார். அச்சமயத்தில் தான் இராமதாசர் பத்ராசலம் தாசில்தாராக ஆகியிருந்தார். மீர் ஜும்லா மீர்சா முகம்மது சையதும், செஞ்சியிலிருந்தும் தஞ்சாவூரிலிருந்தும் திரும்பி குதுப் ஷாகி அரசில் பொறுப்பேற்றிருந்த துபகுல கிருஷ்ண பூபதியும் அப்பொழுது சுல்தான் அப்துல்லாவுடன் நல்லுறவு கொண்டிருந்தனர். இவ்விருவரது அழைப்பின் பேரிலேயே க்ஷேத்ரய்யா கோல்கொண்டாவுக்கு வந்தார். புதிய் தாசில்தாராகப் பொறுப்பேற்றிருந்த இளைஞராகிய இராமதாசர் கோவில் மரியாதைகளோடு மிக நல்ல முறையில் க்ஷேத்ரய்யாவை பத்ராசலத்தில் வரவேற்றார். ஸ்ரீ இராமரைத் தரிசித்த க்ஷேத்ரய்யா அருகிலிருந்த கிராமமான பர்ணசாலைக்கும் சென்றார். அப்பொழுது, முன்பு பர்ணசாலையில் இராமரும் சீதாப்பிராட்டியும் இலக்குவனோடு தங்கியிருந்ததும், இராவணன் சீதையை அபகரித்துச் சென்றதும் அவரது நினைவுக்கு வந்தன. இதைத் தன்னுடைய ஒரு பாடலில் அழகாக க்ஷேத்ரய்யா சுட்டுகிறார்:

**"இராம இராம ப்ரணாசகி நெடபாசி இராமுடு எடுவல
தாலேனோ"**

**தனது தேவியைப் பிரிந்த இராமன் எப்படித் தனது வேதனையைத் தாங்கிக் கொண்டான்? பொறுக்கமுடியாத துயர சாகரத்தில் என்னைப் போலவே அவனும் எப்படித் தத்தளித்தானோ!**

இராமதாசரின் கீர்த்தனைகள் அவரது காலத்தவரும் முந்தியோரும் படைத்தவற்றை விட அமைப்பு முறையில் மாறுபட்டவை. 15ஆம் நூற்றண்டின் கடைசிக் காலத்தைச் சேர்ந்தவர் சித்தேந்திர யோகி என்பது ஆராய்ச்சியாளர்களின் இறுதி முடிவு. அவ்வாறானால் அவர் திருப்பதி தாலபாக்க அன்னமாச்சாரியாரது காலத்தவர்; அன்னமாச்சாரியாருக்கு வயதில் இளையவர். அன்னமாச்சாரியாரோடு கூட இணைந்து தெலுங்கு இசையினைத் தேசி அல்லது பாமரர் பாடல் அமைப்புகளிலிருந்தும் மெட்டுகளிலிருந்தும் ஒரு உன்னத நிலைக்கு உயர்த்திய புகழ் இவருக்கும் உரியது. சமுதாயத்தின் கீழ்த் தட்டில் இருந்த எளிய மக்களுக்கும் மேல் தட்டில் இருந்தோருக்கும் கல்வி கேள்விகளில் சிறந்த பிறருக்கும் ஏற்புடைய மிகச் சிறந்த இலக்கியத்தரத்துக்கு இசையை இவர்கள் இருவரும் உயர்த்தினர். பக்தி ரசத்தை ஊட்டக்கூடியவாறு புராணக்கதைகளை உள்ளடக்கிய ஆயிரக்கணக்கான கீர்த்தனைகளை, நாயக-நாயகி பாவத்தில், மக்களைக் கவர்ந்து ஈர்க்கும் வகையில் அன்னமாச்சாரியார் புனைந்தார். மேலும் அத்யாத்ம சங்கீர்த்தனங்கள் என்கிற வகையைச் சார்ந்த ஆன்மீகப் பாசுரங்களையும் அவர் பெரும் எண்ணிக்கையில் புனைந்தார். சங்கீர்த்தன கோஷ்டி முறையை இவ்வாறுதான் அன்னமாச்சாரியார் துவக்கிவைத்தார். வீட்டிலும் ஆலயங்களிலும் மக்கள் ஒருங்கு திரண்டு பக்திப் பனுவல்களை இசையோடு பாடலாயினர்.

இந்த சங்கீர்த்தன கோஷ்டி முறை தக்கணம், மற்றும் தென்னிந்தியாவின் அனைத்துப் பகுதிகளுக்கும் பரவியது. அன்னமாச்சாரியாரது இரு மரபுகளையும் சுவாமி நாராயணதீர்த்தர் தனது "கிருஷ்ண லீலா தரங்கினி" என்கிற மகா யக்ஷகானத்தில் பஜன நாடக பத்ததி என்ற பெயரில் ஒருங்கிணைத்தார். இந்த வகை நாடகங்கள் இந்த நூற்றண்டின் துவக்கம் வரையில் மக்களிடை மிகவும் பிரபலமடைந்திருந்திருந்தன. இவற்றில் இராமன்; கிருஷ்ணன் அல்லது விஷ்ணு ஆகிய எவர் பெயரில் அந்த நாடகம் இருந்தாலும் கதாபாத்திரங்கள் அனைவரும் ஒவ்வொரு பாகத்தின் ஆரம்பத்திலும் முடிவிலும் ஒன்று சேர்ந்து பகவானின் திருநாமத்தைப் போற்றிப் புகழும் கீதத்தைச் சேர்ந்து பாடி ஆடுவது வழக்கமாயிருந்தது. இதுவே வடக்கில் நவ்தங்கி அல்லது இராம் லீலா எனப் பட்டது.

"இராமதா(சு)சர் சரித்திரம்" என்கிற யக்ஷகானத்தைப் பாடிய கவிஞர்களின் பாக்களும் இராமதாசரின் பாக்களும் பிரித்தெடுக்க

இயலாதவாறு கலந்துவிட்டன. இப்பெயரிலான யக்ஷகானங்கள் அல்லது ஹரிகதைகள் நான்கு 1950இல் உலாவின. அவை ஒவ்வொன்றும் நரசிம்மதாசு அல்லது சிங்காரிதாசு, யாதவதாசு, திருக்கடையூர் கிருஷ்ணதாசு, ஆதிராஜு வீரபத்திர ராவ் ஆகியோரால் தொகுக்கப்பட்டவை. இவற்றுள் நரசிம்மதாசுவும் வர இராமதாசும் தொகுத்த ஒரு நூல் மட்டுமே இன்று காணக்கிடைக்கின்றது. இத்தொகுப்பாசிரியர்கள் இராமதாசரின் கீர்த்தனங்களோடு தங்களது சொந்தப் படைப்புகளையும் கலந்துவிட்டனர். கடைசியில் வரும் இராமதாசரது முத்திரையை வைத்து இவ்வெள்ளைப் பாக்களை ஓரளவு நாம் அடையாளம் காணமுடிகிறது. அவரது கீர்த்தனைகளில் தவறாமல் அவரது பெயரோ பத்ராசல இராமா என்பதோ இடம் பெறும். சிலர் இந்த முத்திரையைக் கூடச் சேர்த்துப் பாக்கள் இயற்றிக் கலந்திருக்கக் கூடும்.

"தக்குவேதி மனக்கு இராமுடு ஒக்கதுண்டு வரகு" என்ற கீர்த்தனையில் இராமதாசரின் முத்திரை ஒன்றும் இல்லை. ஆயினும் அது இராமதாசரின் படைப்பே என்று அனைவராலும் கடந்த ஐம்பதாண்டுகளாகக் கருதப்பட்டு வந்துள்ளது. இதன் இறுதி அடியில் "நாராயணதாசுலு கச்சேடி ஸ்ரீமன் நாராயணுநேட நம்மியுண்டக" என்று கூறப்பட்டுள்ளது. (இதன் பொருள் "தனது பக்தர்களைக் காக்கின்ற நாராயணன் மீது நம்பிக்கை வைப்பவர்கள் விரும்பும் எதுதான் நிறைவேறாமல் போகும்?" என்பது).

இதில் குறிப்பிடப்படும் நாராயணன், நாராயணதாசுலு ஆகியவை, இதைப் பாடியவர் அஷ்டாக்ஷர மந்திரமாகிய நாராயண மந்திரத்தை அப்பொழுது நினைத்துக் கொண்டிருந்தார் என்பதை உணர்த்துகின்றது. கோபண்ணாவுக்கும் இம்மந்திரமே இளம் வயதில் இரகுநாத பட்டர் என்ற வைணவ குருவால் தீக்கை செய்யப்பட்டது. தாசரதி சதகத்தில் ஒருசெய்யுளில் இதைப் பற்றிக் குறிப்பிடுகிறார் இராமதாசர். சிறு வயதிலேயே இவ்வாறு ஸ்ரீ இராமனோடு நாராயண மந்திரத்தின் வழியாக உறவு பூண்டுவிட்டார் இராமதாசர்.

இராமதாசர் மீதான எல்லா ஹரிகதை அல்லது யக்ஷகானத்திலும் "ஆசபுட்டனே ஸ்ரீராமுலது ஆகா நேபுட்ட நெய்தனே" என்ற நீண்ட கீர்த்தனை (இதுவே இராமதாசரது கீர்த்தனைகளுள் மிக நீண்டதாகும்) இடம் பெற்றுள்ளது. சமஸ்கிருத பால இராமாயணப் பாடம் கேட்டுக்கொண்டு ஸ்ரீராம பக்தியில் தன்னை மறந்து மூழ்கியிருந்த ஒரு நேரத்தில் இது இயற்றப்பட்டது என்று தெரிகிறது.

(நெலகொண்டபல்லியில் வாழ்ந்த பௌராணிகர் ஒருவரால் இந்த பால இராமாயணத்துக்கு அருமையானதொரு உரை எழுதப்பட்டது.) இராமதாசரின் இந்த அழகிய நீண்ட கீர்த்தனை அறுபது வரிகளில் இராம சரிதத்தை உரைக்கிறது. இராம காதையில் தனக்குப் பங்கில்லாமல் போய்விட்டதே என்று இதில் பரிதவிக்கிறார் இராமதாசர். பத்ராத்ரி இராமனைக் குறிப்பிடும் ஆரம்பச் செய்யுளும் மற்றொரு செய்யுளும் கீழே தமிழில் உரைநடையில் வடிக்கப் பட்டுள்ளன:

"ஆச புட்டனே ஸ்ரீராமுல்து ஆகா நேபுட்ட நெய்தனே"

**ஸ்ரீ இராமரோடு பிறக்கவில்லையே என்கிற ஏக்கம் என்னை வாட்டுகின்றது; அல்லது அவரது காலத்திலாவது பிறந்து அவருக்கு ஏவலாவது செய்திருக்கலாமே என்று ஏங்குகின்றேன்.**

**-ஏக்கம் என்னை வாட்டுகிறது!**

**இராமரும் அவர் தம் தம்பிகளும் தசரதச் சக்ரவர்த்திக்குப் பிள்ளைகளாக அவதரித்த காலத்தும், பிள்ளை வயதில் இராமர் பிற பிள்ளைகளோடு விளையாடிய காலத்தும், அவருக்கு பக்தி செய்து நான் பணிவிடை செய்யவில்லையே என்கிற ஏக்கம் என்னை வாட்டுகிறது.**

**-ஏக்கம் என்னை வாட்டுகிறது!**

**ஸ்ரீ இராமர் வானர சேனையின் துணைகொண்டு இலங்காபுரியை அடைந்து, அதை முற்றுகை இட்ட போது, நான் பத்ரகிரி ஸ்ரீஇராமருக்குக் காவலாளியாயிருந்து, என் கையாலேயே இராவணனைக் கொன்று, என் தெய்வீக அன்னையைப் பகவானிடம் நானே அழைத்துச் செல்லாமல் போனேனே!**

**-ஏக்கம் என்னை வாட்டுகிறது!**

ஆதியில் இராம காதையின் நாயகனாக இருந்த ஸ்ரீ இராம பிரான் மீது மட்டுமல்லாமல், பத்ராசலத்து அமர்ந்த பிற்கால இராமன் மீதும் இராமதாசர் கொண்டிருந்த பக்தியை இக் கீர்த்தனை நமக்குத் தெரிவிக்கிறது. சிறு வயது முதலே இப் பரம்பொருளின் காவலாளியாகவும் இராமதாசர் தன்னைக் கருதினார். பக்திப் பெருக்கில் முகிழ்த்த இக்கீர்த்தனையின் இறுதிச் செய்யுளில் மட்டுமில்லாமல், நடுவில் இன்னொரு செய்யுளிலும் கூட, - "பத்ரகிரி ஸ்ரீஇராமருக்குக் காவலாளியாயிருந்து" என்ற வரியில் - அவரது முத்திரை பதிந்து கிடக்கிறது.

அவரது இராம பக்தியின் ஆரம்ப கட்டம் தாசரதி சதகத்தில் காணப்படுகிறது. பின்னர், பத்ராசலத்தில் பாழடைந்து

கவனிப்பாரற்றுக் கிடந்த இராமர் ஆலயத்தைத் தரிசிக்க அவர் ஆரம்பித்ததுடன் முஸ்லிம் பக்கிரியான கபீரிடம் தாரக மந்திர தீக்கை பெற்றதும் இராமதாசரின் இராம பக்திக்கு மேலும் உரமிட்டது. அவரது கீர்த்தனைகள் பீறிட்டுப் பொழியலாயின. தீக்கை பெற்ற குதூகலத்தில் கீழ் வரும் கீர்த்தனை பிறந்தது. அதுவே அவரது முதற் கீர்த்தனையாக இருந்திருக்கக் கூடும்.

**"தாரக மந்தரமு கோரின தொரக்கேனு" (ராகம்: தன்யாசி)**

**தவங் கிடந்தேனே! தவங்கிடந்து பெற்றேனே! ஓ சகோதரா! துன்பக் கடலிலிருந்து கரையேற்றும் அம்மந்திரத்தைத் தவங்கிடந்து பெற்றேனே! ஆண்டவனின் அநுக்கிரகம் அடையப்பெற்றேனே! எல்லை கடக்கும் எம தூதர்களுக்கு இதுவே மரணஓலை என அறிந்து கொள்ளுமே!**

**- தவங் கிடந்தேனே**

**அந்நியரின் உபதேசம் என்கிற மாய வலையில் சிக்காதே. நூற்றெட்டுத் தலங்களுக்குத் தீர்த்த யாத்திரை போவதால் என்னதான் பலன்? ஏழு புனித நதிகளில் மூழ்குதல் தான் தேவையா? இவ்வாறு மூழ்குவதால்மட்டும் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியுமா என்ன?**

**- தவங் கிடந்தேனே**

**எத்தனை பிறவிகள் எடுத்துப் பார்த்தாலும் தெய்வம் ஒன்று நாராயணனே. இப்பரம்பொருளின் கதைகளைக் கேட்டால் உலகில் அனைத்தும் அவன் வடிவே என்பதை நீ அறிவாய். எத்தனையோ பிறவிகளில் நீ செய்த பாவமெல்லாம் (தாரக மந்திரத்தை ஓதினால்) எதுவுமே மிச்சமில்லாமல் இப் பிறவியிலே தீர்ந்து போகுமே!**

**- தவங் கிடந்தேனே**

**ஒவ்வொருவரும் பரமானந்தத்தையே வேட்பீர்களாக, தூய மனத்தினராக என்றென்றும் இருப்பீர்களாக! பத்ராத்ரி நாதனை எப்பொழுதும் நினைந்து, கடமைகளில் சிந்தனை செலுத்தி, எதிலும் பற்றற்று இருந்து, வைகுந்த இரகசியம் அறிந்த, ராமதாசனின் பஜனைகளில் அன்றாடம் கலந்து கொள்வீராக! அதுவே ஒரே மார்க்கம்.**

**- தவங் கிடந்தேனே**

பல நூறு பாடல்களை இராமதாசர் பாடியதாக நம்பப்படுகிறது. அவை கீர்த்தனங்கள் என்று அழைக்கப்படுகின்றன. இவருக்கு ஏறத்தாழ ஒரு நூற்றண்டு காலம் முந்தியவரான கர்னாடக தேசத்துப் புரந்தரதாசர் பாடியவை கன்னடத்தில் தேவர்நாமா அல்லது பாடகலு என்று

அழைக்கப்படுகின்றன. தேவர்நாமா என்றால் ஆண்டவனின் திருநாமங்களைத் தொகுத்துக் கூறுதல், அவனது அருளிச் செயல்களைப் போற்றி செய்தல் ஆகும். இராமதாசரது கீர்த்தனங்களும் இவ்வாறே அமைந்துள்ளன. இவரது கீர்த்தனைகளில் ஏறத்தாழ இரு நூற்றை மட்டுமே ஆய்வாளர்கள் சமீப காலம் வரைக் கண்டறிய முடிந்தது. அவற்றைக் கால வகையில் மூன்றாக அவர்கள் பிரிக்கின்றனர்:

1. சிறை வாசத்துக்கு முந்தியவை
2. சிறைவாச காலத்தவை
3. சிறை வாசத்துக்குப் பிந்தியவை.

இவற்றுள் நாற்பது ஐம்பது கீர்த்தனைகள் ஆந்திர தேசத்தில் மட்டுமின்றி, தமிழ் நாடு, கர்னாடகம், கேரளம் ஆகிய பகுதிகளிலும் பரவலாகப் பாடப்பட்டன. அதாவது, சங்கீர்த்தனாச்சாரியாரான திருப்பதி அன்னமய்யா அவர்கள் ஆரம்பித்து வைத்த சங்கீர்த்தன கோஷ்டி முறை எங்கெல்லாம் பிரபலமடைந்திருந்ததோ அங்கெல்லாம் பரவலாகப் பாடப்பட்டன; ஆலயங்கள், நதிக் கரைகள், ஊர்த் திரு விழாக்கள் ஆகியவற்றில் அவை பாடப்பட்டன. பக்த கோடிகள் சேர்ந்து இசைக் கருவிகளுடன் ஆடிப் பாடுவதற்கு ஒரு சாதனமாக அவை அமைந்தன. ஆந்திரத்தில் 20, 30 பேர் இவ்வாறு சேர்ந்து ஆடிப் பாடினர். ஒவ்வொருவரும் தமது கையில் மரத்தாலான கஞ்சிராக்கட்டை வைத்திருந்தனர். நடுவில் சம்யா என்கிற ஒரு உலோக விளக்குக் கம்பத்தை வைத்து இராமதாசரின் கீர்த்தனைகளைப் பாடிக்கொண்டே அதைச் சுற்றி வருவர். ஆந்திரத்தில் இராமர் ஆலயம் இல்லாத குக் கிராமம் கூடக் கிடையாது என்றே சொல்லலாம். அவற்றைத் தவிர புகழ் மிக்க பல பெருங் கோயில்களும் பிற புனிதத் தலங்களும் ஆந்திரத்தில் நிறைய உள்ளன. ஒவ்வொரு ஊரிலிருந்தும் பஜனைக் குழுக்கள் சம்யாவைச் சுமந்துகொண்டு பத்ராசலத்துக்கோ அண்டையிலுள்ள வேறு புனிதத் தலத்துக்கோ இசைத்துக் கொண்டே செல்லும்.

இராமதாசரின் கீர்த்தனைகள் தலை முறை தலை முறையாகப் பல சங்கீத கர்த்தாக்களுக்கும் தூண்டுகோலாய் அமைந்தன. அவர்களில் முக்கியமானவர்களாக குண்டூர் தூமு நரசிம்மதாசர் காஞ்சி வரதராமதாசர், நெல்லூர் அல்லூரு வெங்கடாத்திரிசுவாமி, சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான பெரும் புகழ் பெற்ற தியாகையர் ஆகிய சிலரைக் கூறலாம்.

இருப்பினும். அன்னமாச்சாரியாரின் படைப்புகளைப் போன்று மிக உயர்ந்த இலக்கிய நயமோ பாவமோ நிறைந்தவை என்று இராமதாசரின் கீர்த்தனைகளைக் கூறமுடியாது. சமஸ்கிருதத்திலும் இராமதாசரது கீர்த்தனைகள் சில உள்ளன. ஆனால் நாராயணதீர்த்தரின் "கிருஷ்ண லீலா தரங்கிணி" போல் இசை நாடகத்தின் பகுதிகளாக அவை இயற்றப்பட்டன அல்ல. க்ஷேத்ரய்யா போல் நாட்டியத்துக்கும் அபிநயத்துக்கும் எனப் பாடல் புனையவில்லை இராமதாசர். அவரைப் போல் அனைத்துத் தலங்களுக்கும் கூட இவர் போகவில்லை: கோல்கொண்டா. ஐதராபாத். பத்ராசலம் ஆகியவற்றோடு இவரது வாழ்க்கை நின்றுவிட்டது. தியாகையரின் படைப்புகளான திவ்ய நாம சங்கீர்த்தனங்கள், உத்சவ சம்பிரதாயக் கீர்த்தனைகள் இராமதாசரின் கீர்த்தனங்களை முன்மாதிரியாகக் கொண்டவை: அதே இலக்கிய வடிவையும் இசை மரபையும் கொண்டவை. அதே சமயம். கர்னாடக இசை வளர்ச்சியில் "கிருதிகள்" என்ற கட்டத்தை எடுத்துக் கொண்டால் (சாஸ்திரீய சங்கீதத்தின் மிக உயர்ந்த. நேர்த்தியான நிலையைக் கிருதிகள் உணர்த்துகின்றன) அக்கட்டத்தினின்றும் பல நூற்றாண்டுகள் விலகி இருக்கிறார் இராமதாசர் எனத் தோன்றுகிறது.

இன்று தெலுங்கர்கள் அவர்கள் அரசியல் வாதி, இலக்கிய வாதி, தொழிலாளி, பெட்டிக் கடைக்காரர் அல்லது சாதாரண மனிதர் என்ற எந்த வகையைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் - இராமதாசரின் பாடல்களை அல்லது அவரது ஒரு சில வரிகளை சதா முணுமுணுத்துக் கொண்டிருப்பதை நாம் காணமுடியும். முன்னாள் குடியரசுத் தலைவர் டாக்டர் இராதாகிருஷ்ணன் கூட இதற்கு விதிவிலக்கல்ல.

இராமதாசரின் கீர்த்தனைகள் இவ்வளவு பிரபலமானதற்கு என்னதான் காரணம்? அன்றாட வாழ்க்கையின் இன்னல்களைப் பற்றி அவை பாடுவதுதான் காரணம். இராமதாசர் தனது வாழ்க்கையில் அனுபவித்தவை மட்டுமின்றி. நம் ஒவ்வொருவரும் அன்றாடம் நம் வாழ்வில் அனுபவித்து வரும் சுகதுக்கங்களைப் பற்றியெல்லாம் தனது கீர்த்தனங்களில் அவர் பாடினார். சில கீர்த்தனங்கள் பகவானோடு நேரில் பேசுவது போல் அமைந்துள்ளன: பகவானது பல திருநாமங்களையும் அவரது கல்யாண குணங்களையும் அவர் தாங்கிய பல்வேறு அவதாரங்களையும் அவற்றின் மகிமைகளையும் போற்றிப் புகழ்கின்றன. சில பாடல்கள். முன்பு கூறிய தாரக

மந்திரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது போல் பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும், ஜீவராசிகளுக்கும் பிரபஞ்சத்துக்கும் இடையிலான உறவுகளை விளக்கி, நீதி வாக்கியங்களை நம் முன் வைக்கின்றன. இராமதாசரின் பாடல்களில் பெரும்பாலானவை அநாதையான பக்தனுக்கும் பரம்பொருளுக்கும் இடையிலான உரையாடலாகவே அமைந்துள்ளன; இதில் பக்தனின் எல்லையற்ற பக்திபாவத்தை நாம் காண்கிறோம்.

**1. "பலுகே பங்கார மாயனா"**

**தோல்வி யறியாத கோதண்டத்தைத் தரித்தவனே, உனது வார்த்தை எவ்வளவு மேன்மையானது? பின் ஏன் எனது வேண்டுதல்களை இவ்வளவு உதாசீனம் செய்கிறாய்? எனது கனவில் கூட உனது தியானத்தை நான் மறந்தறியேனே!**

**2. " ஓ ராமா, நீ நாமமேமி ருசிரா"**

**உனது திருநாமந்தான் எவ்வளவு இனியது, ஓ ராமா! பகவானே! கஜேந்திரனையும் பிரகலாதனையும் சுக்கிரீவனையும் விபீஷணனையும் காத்து ரக்ஷித்த உனது பெயருக்கு ஈடுதான் ஏது!**

**3. "சீதாராம சுவாமி நீ ஜேசின நேரமுமேமி"**

**ஓ சீதாராமா! எனது குற்றம் தான் என்ன? கமலங்களை ஒத்த உனது இணையடிகளை நான் தியானித்த வேளையிலும் உனது ஒப்பில்லாத கீர்த்தியைப் பிரசங்கம் செய்த வேளையிலும், நான் அறியாது செய்துவிட்ட குற்றம் தான் என்ன, ஐயனே?**

**4. "அதுகுடெடி கதலனிவ்வனு"**

**புகலிடம் தேடி எங்கெல்லாம் அலைந்தேன்! தேடித் தேடிக் களைத்து விட்டேன் சுவாமி! நீ எனக்குப் பாதுகாப்பு அளிப்பதாக வாக்களிக்காவிட்டால் உன்னை ஒரு அடி கூட நகர இனி விடமாட்டேன் நான்.**

சிருங்கார ரசத்தையும் இராமதாசர் விட்டுவிடவில்லை. சோதனைகள் மிகுந்த காலத்தில் இயற்றிய சில பாடல்களில் கூட இந்த ரசம் காணப்படுகிறது. ஆயினும் அன்னமாச்சாரியார், க்ஷேத்ரைய்யா ஆகியோரது படைப்புகளில் காணப்படுவது போல் நாயக - நாயகி பாவத்தில் இராமதாசர் இவற்றைப் புனையவில்லை. ஆதரிப்பார் யாருமில்லா அநாதையாக அவர் வெஞ்சிறையில் அடைபட்டிருந்த நேரத்தில், ஸ்ரீ இராமனுக்கு அவர் விடுத்த வேண்டுகோள்கள் அனைத்தும் வீணாய்ப்போன நேரத்தில் அன்னை சீதா தேவியிடம்

அவர் முறையிடலானார். அத்தேவியே லோக நாயகியாய் அவருக்குத் தோன்றினார்.

**"நன்னு ப்ரோவமனி செப்பவே"**

**தாயே சீதா தேவி, அரவணையில் உன் நாயகன் உன் அருகில் அமர்ந்து உனது கன்னங்களை வருடி, தன்னை மறந்து ஆனந்தத்தில் லயித்திருக்கும் நேரம் பார்த்து, என்னைக் காக்குமாறு அவரிடம் கூறுவாயாக. பஞ்சணை மீது, சகல செல்வங்களுக்கும் தாயாகிய நீயும் பிரபஞ்சங்களுக்கெல்லாம் நாயகனான உனது நாயகரும் தனித்திருக்கும் வேளையில் என்னைக் காப்பாற்ற வேண்டுமென்று ஸ்ரீ இராமரிடம் கூறு தாயே!**

**"ராமச்சந்த்ருளு நாப்பை சலமுசேசினம்மா"**

**ஸ்ரீ இராமச்சந்திரர் என்னிடம் பிடிவாதமாயிருக்கிறார். தாயே, அவரிடம் எனக்காகப் பேசுங்கள். ஐயோ, என் முறையீடுகளுக்குச் செவி சாய்க்க மாட்டேன் என்கிறாரே. அன்னை சீதையே நான் என் செய்வேன்? அவரது கல் மனம் கரைய மறுக்கிறதே. எனது பழ வினைகளின் பலனை நான் அறியாமல் போய்விட்டேனே! நீங்கள் என் பொருட்டு அவரிடம் பேசினால் உங்களுக்கு மேலும் புகழ் கூடும்.**

அன்னை சீதைக்கு விண்ணப்பித்து அவர் பாடிய இன்னொரு பாடலை முந்திய அத்தியாயத்தில் பார்த்தோம். அது "ஜனக தனயா" என ஆரம்பித்து, "பன்னிரண்டு ஆண்டுகள் அல்லும் பகலும் பகை காரணமாக" இராமதாசர் அனுபவித்த சித்ரவதைகளை வருணிக்கிறது: தொகையினைத் தாமதமின்றிக் கொணர்ந்து, கடனிலிருந்து தன்னை உடனே மீட்குமாறு வேண்டுகிறது.

சிறையிலிருந்து விடுதலைபெற்று, நிரபராதியென அறிவிக்கப்பட்டு பல்லக்கிலேறி பத்ராசலம் நோக்கி இராமதாசர் சில நகைகளுடனும் தொகையுடனும் சென்று கொண்டிருந்த போது ஒரு கொள்ளைக்கூட்டம் அவரை மடக்கியதாக யக்ஷகானங்கள் கூறுகின்றன. இந் நிகழ்ச்சியினை அவரது இரண்டு பாடல்கள் விவரிக்கின்றன.

**"ராமுட கலடு நாபால"**

**இராம பிரான் என் அருகிலேயே இருக்கிறார். ஆம் இங்கேயே இருக்கிறார்! கார் வண்ணன், லோகத்தின் துயர் துடைப்பவன், பரமானந்தத்தை அளிப்பவன், பக்தர்களைக் காப்பவன்! அவனது கருணை மழை பொழியும் கண்கள் பக்தர்களின் மனதைக் குளிர வைக்கின்றன. அந்த இராமன் இதோ இங்கேயே இருக்கிறான்!**

**அவனும் இளைய பெருமாளும் வில்லும் கையுமாக இரு பக்கலிலும் நின்று, அளவற்ற பரிவோடு அஞ்சேல் என்று எனக்கு உற்சாகம் ஊட்டுகிறார்கள்! சினந் தணிந்த அவனது ஆழி மழைக் கண்களும் மலர்கள் சொரியும் அவனது அழகு பொழி மகுடமும் பொற்றாமரை ஒத்த அவனது ஒப்பில்லா பாதங்களும் எப்பொழுதும் பணிந்து வணங்குமாறு என்னைக் கவருகின்றன. ஒரு கணமும் இராமதாசனை விட்டகலாமல் அவை அருளோடு கண்ணின் கருமணிபோல் அவனைக் காவல் செய்கின்றன! இராமன் இதோ இங்கேயே இருக்கிறான்!**

இக் கூற்று எவ்வளவு உண்மை என்பதை அடுத்து வரும் கீர்த்தனை உறுதிப்படுத்துகிறது

**"பிரத்யக்ஷ முகனு ஈவேலா பிரதிகிஞ்சிதிவய்யா"**

**எனக்கு உயிர்ப் பிச்சை இன்று நீ அளித்துவிட்டதை என் கண்கள் காணமுடிகிறது, அப்பனே! ஓ இராமச்சந்திரா, நீயே எனது கண்கண்ட தெய்வமாயிருக்கிறாய். அந்தகார இருளில், அடை மழை கொட்டிய வேளையில், என்னிடமிருந்த பொருட்களைக் கவர்ந்து கொள்வதற்கு வாளேந்திய கொள்ளையர்கள் என்னைச் சூழ்ந்த போது அச்சத்தினால் எனது இதயம் படபடத்தது; அப்பொழுது உன் மீது பாரத்தைப் போட்டுவிட்டேன். எனக்கு உயிர்ப் பிச்சை இன்று நீ அளித்துவிட்டதை என் கண்கள் காணமுடிகிறது, அப்பனே!**

சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான தியாகராஜரின் வாழ்விலும் இத்தகைய வழிப்பறி நிகழ்ந்தது என்பதையும், பல்லக்கில் பயணம் செய்து கொண்டிருந்த அவரது பாதுகாப்புக்காக இராமனும் இலக்குவனுமே வில்லேந்தி அப்போது வந்தனர் என்பதையும் கற்றோர் அறிவர். இதைக் குறித்துதான் அவர் தனது "முந்து வெநுக" என்கிற தர்பார் இராகக் கீர்த்தனையை இயற்றியுள்ளார்.

பத்ராசலம் திரும்பிய பின், தனது நகர சங்கீர்த்தனங்கள் வரிசையில் "ஸ்ரீராமுல திவ்யநாம ஸ்மரண சேயுசுன்ன சாலு" எனத் தொடங்கும் பாடலைப் பாடினார். அரசாங்கப் பணத்தை எடுத்து ஆலயத்துக்குச் செலவிட்டதற்கு அதில் கழுவாய் தேடுகிறார் போல் அது தொனிக்கிறது.

**தூரத்திலுள்ளோரின் செல்வத்தைக் கையாடாமல் இருப்பது சாலச் சிறந்தது. ஆலயம் கட்டும் போது இதை நினைவில் கொள்ள வேண்டாமா, ஓ மனமே!**

தியாகையருக்கும் இராமதாசருக்கும் இடையில் இன்னுமொரு ஒற்றுமையையும் நாம் பார்க்கலாம். ஆனால் சம்பவங்கள் வேறுபடுகின்றன. காவிரி நதியிலிருந்து ஸ்ரீ இராமரின் விக்கிரகங்கள் தியாகையருக்கு மீண்டும் கிடைக்கின்றன. அப்பொழுது பிலஹரி இராகத்தில் ஒரு கீர்த்தனையை அவர் பாடுகிறார். "கனுகொண்டினி ஸ்ரீராமுனி நேடு" என்று அது தொடங்குகிறது. இதே போல் இராமதாசரின் கீர்த்தனை யொன்றும் அமைந்துள்ளது. கோல்கொண்டாவில் சிறை வாசத்திலிருந்து மீண்டு பத்ராசலம் திரும்பி ஸ்ரீ இராமரை அவர் கண்டபோது அது பாடப்பட்டது.

**"கண்டி மா ராமுல கனுகொண்டினேடு"**

**எனது இராமனை இன்று நான் காண்கிறேன். ஆமாம் இன்று அவனைக் காணமுடிகிறது! பக்தர்களின் பிரார்த்தனைகளுக்கும் பூஜைகளுக்கும் காரணனாய் பத்ரகிரியின் மீது அமர்ந்திருக்கும் என் ஆண்டவனை, இணையற்ற வில் வீரனாகிய இராமனை, அழகிய மனைவி சீதையோடு கொலுவீற்றிருக்கும் நாயகனை இன்று என் கண்கள் காண்கின்றன!**

கீர்த்தனைகளின் சுவை, பாவம், கருத்து ஆகியவற்றின் அடிப்படையில், இராமதாசரின் பாடல்களை ஐந்து வகையாகப் பிரிக்கலாம். கீர்த்தனைகளில் பக்தி வெளிப்பாடானது வெவ்வேறு வடிவைப் பெறுகிறது. அவை சாந்த (ஆடம்பரமில்லாத அமைதியான) பக்தி, தாஸ்ய பக்தி (ஆண்டவனுக்கு அடிமையாகத் தன்னைக் கருதுதல்), சாக்ய பக்தி (ஆண்டவனை பக்தன் தனது தோழனாகப் பாவித்தல்), வாத்சல்ய பக்தி (ஆண்டவனைத் தன் குழந்தையாகவோ அல்லது தந்தையாகவோ பாவித்தல், வைர பக்தி (ஆண்டவனின் அருள் கிடைக்காத நிலையில் ஏக்கமோ ஏமாற்றமோ மேலிட, அவனது சாதனைகளையும் குணங்களையும் கூறிப் பரிகசித்தல்) ஆகியனவாகும்.

இராமதாசரின் கீர்த்தனைகளிலும் இத்தகைய பக்தி வகைகளைக் காணலாம். தீவிர ஏக்கம், துயரம், துக்கம், வருத்தம், ஏமாற்றம், தன் மீதே குறை காணல், ஆவேசம், வேகம், தெய்வத்தைப் பற்றியே அவநம்பிக்கை, ஆழ்ந்த நம்பிக்கை, தோழமை, தன் செயுல்களையே மதிப்பீடு செய்தல், தேடல், சோதித்தல், போதனை செய்தல், நன்றிப் பிரவாகம், போற்றிச் செய்தல் (மங்களா சாசனம் செய்தல்) போன்ற பல வகை உணர்வுகளை அவற்றில் காணலாம்.

அவரது பக்தி வகைகளுக்குச் சில சான்றுகள்:

**சாந்த பக்தி:** இராம நாமத்தைத் தியானம் செய்தாலே போதுமே ("ஸ்ரீ ராமுலு திவ்ய நாம ஸ்மரண செயுசுன்ன சாலே")

**தாஸ்ய பக்தி:** வெகு காலமாகவே பத்ராசல ஸ்வாமியின் பாதங்களின் கீழ் அமர்ந்திருப்பதாக அல்லவோ நினைக்கிறேன் ("பகுகாலமுனக்கு பத்ராசலஸ்வாமீ")

**சாக்ய பக்தி:** ஓரடி கூட நீ நகர விடமாட்டேன் ("அடுகு தாட்டி கதல நிவ்வனு")

**வாத்சல்ய பக்தி:** ஓ குழந்தாய் கோபாலகிருஷ்ணா, நான் அந்த பூச்சிக்காரியை அழைக்கட்டுமா ("பூச்சிவானி பிலுவபோதுனா கோபாலகிருஷ்ணா")

**வைர பக்தி:** உன்னால் எதையுமே சாதிக்க முடியவில்லையே, ஓ ராமா! ("ராமா நீ சேதேமி காதுகா")

**நாம மகிமை:** ராம நாமமே உயிர் ("ராம நாமமெ ஜீவநமு")

ராம நாமத்தை என்றும் மறவோம், என்றும் மறவோம் ("ஸ்ரீராம நாமம் மருவம், மருவம்")

ஓ ராமா, உனது நாமம் எவ்வளவு இனிமையாக இருக்கிறது! ("ஸ்ரீராமா நீ நாமம் ஏமி ருசிரா")

***வேண்டுதல்கள்:***

ஓ கோதண்டராமா, எங்களைக் காக்க வாருமே ("கோதண்டராமா, ஆதுகொன ரம்மோ")

இக்ஷ்வாகு குல திலகமே, எனது அழைப்பு உனக்குக் கேட்க வில்லையா ("இக்ஷ்வாகு குலதிலகா, இகனைன பலுகவெ")

ஓ ராமா, எனது குற்றம் தான் என்ன ("ஏமிரா ராமா, நாவல்ல நேரமு")

எனது எல்லாத் தவறுகளையும் மன்னிப்பாயாக ("நா தப்புலன்னி க்ஷமிம்புமு")

எங்கு போயினை ராமா ("எடு போத்திவோ ராமா")

எப்படிப் பொறுப்பேன் ("ஏலாகு தாலுது")

**இராமனோடு வாதிடல்:**

அவமதித்தவனது நாமத்தை எப்படிப் பார்வதி தியானம் செய்தாள் ("ஆதரனலேனி நாமமந்த்ர பட்டன அத்ரிஜா ஏமினி சேசினு")

கோதண்டபாணி, ஏன் என்னுடன் பேச மறுக்கிறாய் ("முச்சடைன ஆடவேமிரா")

முன்பே தெரியாமல், மோசம் போனேனே ("தெலியக நே மோச போதி")

***நீதிகள் அடங்கிய தத்துவப் பாடல்கள்:***

பற்றற்ற மனமே மிகவும் பொருத்தமானது ("பாலிரா வைராக்ய மேன்ட்டு பாகை யுன்னதி")

கடந்த காலச் செயல்கள் எதுவாயிருந்தாலும் ("எக்கடி கர்மமுலு")

எத்தனைப் பிறவிகள் ஆயினும் ("என்னெனி ஜன்மமுலு")

மறவாதே ஓ மனமே ("மானசா நீவு மருவக்குமி")

எல்லாம் ராமமயம் ("அந்தா ராமமயம்")

பாகவதத்தில் கூறப்படும் திருமாலின் அவதாரங்கள் அனைத்தையும் வருணித்து தண்டகம் என்ற இசைப் பாடல் ஒன்றை இராமதாசர் இயற்றியுள்ளார். "பாஹி ராமப்பிரபோ" என்று அது தொடங்குகிறது. சங்கீத சாஸ்திரத்தில் அது ஒருவகை "கத்யப் பிரபந்தம்". கண்ட கதியில் அதைப் பாடவேண்டும். சூர்னிகா என்ற மற்றொரு கத்யப் பிரபந்தத்தையும் இராமதாசர் இயற்றியுள்ளார். பகவானின் திருநாமங்கள் இருபத்தி நான்கினைச் சொல்லும் இதை எந்தத் தாளமுமின்றியே பாடலாம்.

# இராமதாசரின் இசை

திடீரென இந்நூலாசிரியர் இந்த அத்தியாயத்தில் தன்மை (first person) நிலையில் எழுத்தப் புகுவதை வாசகர்கள் பொறுப்பார்களாக.

அரை நூற்றாண்டு காலத்துக்கு முன்பிருந்தே. அதாவது நான் குழந்தையாயிருந்த நாட்களிலேயே. பலர் வாயிலாக இராமதாசரின் பாடல்களைக் கேட்கும் பேறு பெற்றிருந்தேன். அவ்வாறு நான் கேட்கப் பாடியவர்கள் எனது (அப்பாவின் உடன் பிறந்த) சித்தப்பா, தாய்வழிப் பாட்டியார், எனது தாயாரின் சகோதரி மகன் ஒருவர் - இவர் வார இறுதி நாட்களில் எங்களது இல்லத்துக்கு வந்து பக்திக் கீர்த்தனைகளைப் பாடிவந்தார் -, ஒரு யுனானி மருத்துவர் ஆகியோர். இந்த முஸ்லிம் வைத்தியர் ஒரு சிறந்த நடிகரும் கூட: இராமதாசர், கபீர், தானிஷா ஆகிய பலரது வேடத்தையும் தாங்கி மேடையில் நன்கு நடிப்பார் இவர். இவர்கள் மட்டுமன்றி, தாசரிகள் வாயிலிருந்தும் இராமதாசரின் பாடல்களை நான் செவிமடுத்துள்ளேன். இந்த தாசரிகள், துறவுக் கோலத்தில் குத்து விளக்கு, தம்பூரா, கஞ்சிராக் கட்டைகள் ஆகியவை ஏந்தி இராமதாசர் கீர்த்தனைகளை ஆட்டத்தோடு பாடிக்காட்டி ஊர் ஊராகத் திரிவர். ஜமீன்தார்கள் வசமிருந்த நமது ஆந்திரப் பிரதேசத்துக் கடற்கரைப் பட்டினங்களில் நடைபெறும் இராம நவமி, சீதா கல்யாணம் போன்ற ஆண்டுக் கொண்டாட்டங்கள் மட்டுமின்றி, சங்ராந்தி, தீபாவளி, வருடப் பிறப்பு போன்ற விழாக்களின் போதும் இரண்டு அல்லது மூன்று பஜனைக் கோஷ்டிகள் தவறாமல் பங்குகொண்டு, கையில் விளக்குக் கம்பம், கஞ்சிராக் கட்டை ஏந்தியும், காலில் சலங்கைகள் இசைக்கவும் சுற்றிச் சுற்றி ஆடிக் கொண்டே, இராமதாசர் கீர்த்தனைகளைப் பாடி மக்களைப் பரவசப் படுத்தும். ஒவ்வொரு பஜனைக் கோஷ்டியிலும் பத்துப் பதினைந்து பேர் இருப்பார்கள். இக் கலைஞர்கள் அனைவரும் குடியானவர்களாகவும் கிராமத்துத் தொழிலாளிகளுமாகவே இருப்பர்.

இராமதாசரின் இருபது முப்பது கீர்த்தனைகளே மிகவும் பிரபலமாக இவர்களால் பாடப்படும். அவற்றில் சிலவற்றின் ஆரம்ப வார்த்தைகளும் இராகமும் இங்கே தரப்படுகின்றன:

1. *"கருட கமண ராரா": கல்யாணி*
2. "பலுகே பங்கார மாயனா": ஆனந்த பைரவி

3. "தக்குவேதி மனக்கு":
4. "தாரகமந்த்ரமு": தன்யாசி
5. "எதீருகனனு தய சூசெதவூ": நாதநாமக்கிரியா
6. "ஸ்ரீராமா நீ நாமம் ஏமி ருசிரா": பந்துவராளி

"இராமதாசு சரித்திரம்" என்ற ஒரே பெயரைத் தாங்கிய ஐந்து அல்லது ஆறு நூல்கள் வழக்கிலிருந்தன: அவற்றை இயற்றியவர்கள் யாதவதாசு, சிங்காரதாசு அல்லது திருக்கடையூர் குருஷ்ணதாசு, அய்யகாரி வீரபத்ர ராவ், பாலாஜி தாசு, பென்டபாட்டி சர்வேஸ்வர ராவ் ஆகியோர். கடைசி இரு ஆசிரியர்களும் தங்களது நூல்களை "பத்ராசல இராமதாசு" என்றும், "பக்த இராமதாசு" என்றும் குறித்தனர். யக்ஷகானம் அல்லது ஹரிகதை வடிவில் அமைந்த இந்நூல்கள் அனைத்தும் இராமதாசரின் கதையை அவரது பாடல்கள் இடையிடையே விரவி வர வருணித்தன.

இந்நூல்களில் நூலாசிரியர்களின் பாடல்களும் இராமதாசரின் படைப்புகளோடு கலப்புற்றன. பெரும்பாலும் கடைசிக் கீர்த்தனைகளிலோ, சில இடங்களில் இடையிலேயோ கூட, இராமதாசரின் "முத்திரையும்" அவற்றில் பதிக்கப்பட்டன. எனவே இராமதாசரின் கவிதைகளைச் செருகல் கவிதைகளிலிருந்து பிரித்தெடுப்பது கடினமாகவுள்ளது.

சமீப காலம் வரை இராமதாசரின் கீர்த்தனைகளில் பெரும் பகுதி கர்னாடக இசைக் கச்சேரிகளிலிருந்து ஒதுக்கி வைக்கப்பட்டு வந்துள்ளது. ஆலயங்களிலும் வீடுகளிலும் நடைபெற்ற சங்கீர்த்தன கோஷ்டிகளில் மட்டுமே அவற்றைப் பாடுவது வழக்கமாக இருந்துள்ளது. பந்துவராளி ராகத்தில் அமைந்த "என்னகனு ராமபஜனா" என்ற கீர்த்தனை மட்டுமே விதிவிலக்காகக் கச்சேரிகளில் பாடப்பட்டது சங்கீதத்தில் வித்வத்துவத்தைக் காட்டக் கூடிய விதமாக இராமதாசரின் கீர்த்தனங்கள் அமையாததால் வித்வான்கள் கச்சேரிகளில் அவற்றைப் பாடுவதன் மூலம் தமது சாமர்த்தியத்தை வெளிப்படுத்த இயலாது என்று கருதியிருக்கலாம்: சிக்கலில்லாத நேரான எளிமையான சந்தங்களில் அவை இயற்றப்பட்டு, குழு சேர்ந்து பாடுவதற்கே பெரிதும் ஏற்புடைய விதத்தில் அமைந்திருப்பதும் கூட ஒரு காரணமாயிருக்கலாம். ஆயினும், தியாகராஜரின் உத்சவ சம்பிரதாயக் கீர்த்தனங்கள், திவ்ய நாம சங்கீர்த்தனங்கள் போன்று இராமதாசரின் கீர்த்தனைகளும்

கச்சேரிகளில் பாடப்படும் தகுதியை நிறையவே பெற்றுள்ளன. மேலே குறிப்பிடப்பட்டுள்ள தியாகராஜரின் கீர்த்தனைகள் கூட இராமதாசர் பாடல்களால் உந்தப்பட்டு உயிர்த்தனவே என்பதை மறந்து விடக் கூடாது.

யக்ஷகானங்களில் 100 முதல் 108 பாடல்கள் வரை இராமதாசரால் இயற்றப்பட்டவையே என்பதை என்னால் காட்ட முடியும். எனது நண்பர் மஞ்சால ஜகன்னாத ராவ் இராமதாசரின் 137 கீர்த்தனைகளை அடையாளங்கண்டு அவற்றுக்கான சங்கீதக் குறியீடுகளையும் (notations) கூடச் சேகரித்து வைத்துள்ளார். ஐதராபாத் மத்தியப் பல்கலைக் கழகத்தில் எம். ஃபில் பயின்று வந்த டி.வி. நாகரஞ்சனி என்பவர் ஏறத்தாழ 137 பாடல்களை இராமதாசருடையவை என்று தெரிந்தெடுத்துள்ளார்; இவரே மிகவும் பொருத்தமான முறையிலும் நுணுக்கமாகவும் ஆய்ந்து அக்கீர்த்தனைகளை மூன்று காலப் பிரிவுகளுக்கு உரியவை என வகைப்படுத்தினார்: சிறைவாசத்துக்கு முன் இயற்றப்பட்டவை 37, சிறையில் இயற்றப்பட்டவை 64, சிறையிலிருந்து விடுதலையடைந்த பின் பாடியவை 31, என அவர் வகுத்துள்ளார். ஆனால் இதன்படி மொத்தம் 132 பாடல்களே ஆகிறது.

ஆனந்த பைரவியில் "பங்கார மாயனா", காம்போதியில் "ஏமைய்யா இராமா" ஆகிய இரு பாடல்களையும் தற்காலத்தில் வித்வான்கள் பாலமுரளி கிருஷ்ணாவும் சின்ன சத்திய நாரயணாவும் நேதுனேரி கிருஷ்ணமூர்த்தியும் பிரபலப் படுத்தியுள்ளனர்.

"வாக்கேயகார சரித்திரம்" என்ற நூலை நான் எழுதிய போது, இராமதாசரின் கீர்த்தனைகளில் காணப்படும் கர்னாடக இசை இராகங்கள் 20 எனவும், இந்துஸ்தானி இராகங்கள் ஏறத்தாழ ஆறு எனவும் நான் எழுதியுள்ளேன். அவை வருமாறு:

***கர்னாடக இராகங்கள்***

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆனந்த பைரவி | 2. | ஆஹிரி |
| 3. | வராளி | 4. | தன்யாசி |
| 5. | சௌராஷ்டிரம் | 6. | யதுகுல காம்போதி |
| 7 | காம்போதி | 8. | சைந்தவி |
| 9. | சுருட்டி | 10. | நாதநாமக்கிரியா |
| 11. | கல்யாணி | 12. | சங்கராபரணம் |
| 13. | பந்துவராளி | 14. | புன்னாகவராளி |

| | | | |
|---|---|---|---|
| 15. | கௌலிபந்து | 16. | பிலஹரி |
| 17. | முகாரி | 18. | சாவேரி |
| 19. | அசாவேரி | 20. | நவ்ரோஜ் |
| 21. | நீலாம்பரி | | |

### இந்துஸ்தானி இராகங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | காபி | 2. | கமாஸ் |
| 3. | கானடா | 4. | தர்பாரு |
| 5. | பேகடா | 6. | யமுனாகல்யாணி |

இராமதாசரின் கீர்த்தனைகள் நேரடியாக இறைவனோடு உரையாடுவது போன்றே அமைந்தன. ஒரு பக்தன் தனது உள் உணர்வுகளையெல்லாம் வெளிப்படுத்துவது போன்று அமைவதே கீர்த்தனைகள். "அன்னமாச்சாரியார், நாராயணதீர்த்தர் போன்ற தனக்கு முந்திய காலத்துக் கீர்த்தனாச்சாரியார்களுக்கும், பிற்காலத்தில் கிருதிகள் இயற்றிய சங்கீத கர்த்தாக்களுக்கும் இடையிலான ஒரு சங்கிலி போன்றவர் இராமதாசர்" என பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி எழுதினார். இராமதாசரின் "நெஞ்சை உருக்கும் பாடல்கள், அவற்றில் பொதிந்துள்ள ஆழமான உணர்வுகள், கருப் பொருள், இசை இனிமை ஆகியவை ஒதுக்கமுடியாத ஈர்ப்பு சக்தி வாய்ந்தவை" என்று அவர் மேலும் எழுதினார்.

இராமதாசர் தனது கீர்த்தனங்களில் இராகவிஸ்தாரத்துக்கு முக்கியத்துவம் கொடுக்கவில்லை. தியாகராஜருக்கு இசையேதான் இராமர்; இராமதாசருக்கோ இராமர் தான் இசை. கச்சேரிக்கென அமைந்தவை தியாகராஜரின் கீர்த்தனைகள்; இராமதாசருடையனவோ ஆலய முகப்பிலும் விழாக் காலத்தில் வீதிகளிலும் இசைப்பதற்கென இயற்றப்பட்டவை. பஜனை கோஷ்டியில் ஒவ்வொருவரும் தம்மை மறந்த நிலையில் பக்திக்கு ஆட்பட்டு ஆடிப் பாடும் விதத்தில் இராமதாசரின் பாடல்கள் செய்யப் பட்டவை.

இசை மற்றும் கவித்துவத்தில் ஈடு இணையில்லாதவை அன்னமாச்சாரியாரது சங்கீர்த்தனங்கள். தத்துவம் அடங்கிய அவரது சிருங்கார ரசப் பாடல்களும் சிருங்கார ரசக் குறிப்புகள் அடங்கிய தத்துவப் பாடல்களும் சங்கீர்த்தனங்களுக்கே எடுத்துக் காட்டாகத் திகழ்பவை. க்ஷேத்ரைய்யாவின் பதங்கள் தெய்வத்தின் மீதான காதல் உரையாடலாகப் பல்வேறு நாடக அம்சங்களைக் கொண்டவை

இராமதாசரின் கீர்த்தனஙகளோ ஆதரவற்ற ஒரு பக்தன் ஆண்டவனிடம் நேரே முறையிடும் விதத்தில அமைந்தவை செயயுள் விதிகளை மனதில் வைத்துக் கொண்டு அவா ஒரு போதும் தனது பாடலகளைப் புனையவில்லை தானும் தன்னைச சுறறியிருபபோரும் இசைப் பாடல்கள் வாயிலாகத தம்மை இறைவனுக்கு அறபணிததுக் கொள்வதே அவரது நோக்கம். பக்தி அனுபவமாகிய ஆனநதத்தை மனத தூய்மையுடன் மிக எளிய முறையில மக்களோடு பகிாநது கொளளுவதே அவரது இசையின் தாதபா்யம் இராமதாசரின் பல கீர்த்தனங்கள் கையறு நிலையிலுள்ள ஒரு பக்தன நேரே ஆண்டவனுடன் பேசுவது போல நாடக வசன பாணியில உளளன. இது யக்ஷகான தருவு (daruvus) பாணியிலிருந்து வேறுபடடது.

ஆறுககும அதிகமான கீாததனஙகளை இராமதாசர் ஆனந்த பைரவி இராகததில் இயற்றியுள்ளாா இதுவே அவருககுப் பிரியமான இராகமாகத் தோனறுகிறது

இராமதாசரின் வாழ்ககை வரலாறறை முதலில எழுதியவர் 18ஆம் நூற்றணடில பத்ராசலததில் வாழ்நதவரான யாதவதாசர் இவர் *"கருடாசல யகஷ கானம"* *எனற மறறொரு யக்ஷகானததையும* இயறறியுளளாா இறைவன நரசிமம மூர்ததிக்கும் மலைவாசிகளின் ராஜாவான ஒருவனின மகளான செஞசுலடசுமிககும் இடையிலான காதல கதையை இது கூறுகிறது இந்த நூல பதராசலதது ஸ்ரீ இராமருககுச சமாபபணம் செயயப்படடுளளது. பழைய இராமதாசர் கீர்த்தனைகள் எனறு அடையாளம காணக்கூடிய எதுவும, திரிபுட, ஆதத சநதிரிக, ஜமபே, கணடாாத்த யகஷகானங்களின் தருவுகளோடு சிறிதும ஒதததாகக் காணப்படவிலலை ஆனால் முன்பு கூறபபட்டது போன்று பஜனைக கீாததனஙகளையும நாடகபபாணி வசனஙகளையும *கலநதவையாக அவை உளளன ஆலயப் பாடலகள வகையைச சோநத* கதயப் பிரபநதங்களில சூாணிகா, தண்டகம ஆகிய வடிவஙகளைக் கொண்ட சில பாடலகள இராமதாசரின் "இராமதாசு" அலலது "பதராசல இராமா" எனகிற முததிரையைத தாஙகி அவரது படைபபுகளாகக் கருதப படுகின்றன சூாணிகாவானது அதில விரவியுளள கனமான சமஸகிருதத தொடாகள அலலது எளிமையான தேசி பாஷையைப பொருதது லயமிலலாத ஆலாபதி பாணியிலோ, கன மற்றும் நய பாணியிலோ பாடபபடுகிறது தணடகமும அதேபோல, ஆனால மத்தளம அல்லது தவில முழக்கத்தோடு பாடபபடுகிறது

நரசிம்ம தாசுவின் " இராமதாசு சரித்திரம் " மட்டும் தான் என்னிடமுள்ளது. அதில் இராமதாசரின் பாடல்களென சுமார் 103ஐ என்னால் கண்டுபிடிக்க முடிந்தது. அந்நூலின் இறுதியில் உள்ள சில பாடல்களை இணைக்கும் வகையில் உள்ள தொகராக்களை (Toharas) நான் நுணுகி ஆராய்ந்த போது அதனைத் தொகுத்தவர் இராம வரததாசு எனவும், அதனை மக்களிடைப் பிரபலப் படுத்தியவர் நரசிம்மதாசு எனவும் அதில் கூறப்பட்டுள்ளது தெரியவந்தது. இராமதாசரின் வரலாற்றை வரைந்த இவ்வாசிரியர்கள் இருவரும் யாதவதாசுவின் யக்ஷகானத்தால் ஈர்க்கப்பட்டு, அதிலுள்ள பாடல்களையே பெரும்பாலும் எடுத்தாண்டு, அவற்றை இராமதாசருடையவை எனக் கருதினர் என்பது எனது முடிபு.

" இராமதாசு ", " பத்ராத்திரி " ஆகிய முத்திரைகளுடன் ஆறுக்கும் அதிகமான சமஸ்கிருதக் கீர்த்தனைகள் உள்ளன. வாக்கியத்திலும் இசையமைப்பிலும் நாராயணதீர்த்தரது "கிருஷ்ண லீலா தரங்கிணி" யோடு பல ஒற்றுமைகளை அவை பெற்றுள்ளன. " இராமதாசு சரித்திரம்" என்கிற யக்ஷகானம் கிருஷ்ண லீலா தரங்கிணியுடன் மற்றொரு ஒற்றுமையையும் பெற்றிருக்க வேண்டும். அதாவது, இரண்டிலுமே பஜன நாடக பத்ததி என்ற முறையில் பாத்திரங்கள் ஒவ்வொரு அங்கத்தின் முடிவிலும் ஒன்று சேர்ந்து கோஷ்டி கீதம் இசைக்கின்றன.

# பிற்காலத்திய சங்கீத கர்த்தாக்களின் மீது இராமதாசரின் தாக்கம்

இராமதாசர் மீது யக்ஷகானம் பாடி, அவரது வாழ்க்கை வரலாற்றை வரைந்தோரில் காலத்தால் முந்தியவர் யாதவதாசரே. எனவே இராமதாசரால் கவரப்பட்டவர்களில் அவ்ரே முதலாமவர் என்று கூறலாம்.

தனது "கருடாசல யக்ஷகானத்தை" யாதவதாசர் இயற்றிய போது அவர் இளைஞராய் இருந்திருக்க வேண்டும். அப்படியெனில், இராமதாசர் மீதான யக்ஷகானத்தைப் பாடியபோது அவர் வயது முதிர்ந்தவராய் இருந்தார் எனக் கொள்ளலாம். இந்த யக்ஷகானம் தென்னிந்தியாவில் நன்கு பரவி, இராமதாசருடைய வரலாறும் அவர் சிறந்த இராம பக்தர் என்பதோடு, பத்ராசலத்தில் அவர் அமைத்த ஆலயம் பற்றிய செய்தியும் அனைவருக்கும் தெரிய வரலாயின. அரை நூற்றாண்டு சென்ற பின், அதாவது 18ஆம் நூற்றாண்டின் இறுதி வாக்கில், இராம பக்தியைப் பரப்பும் இச்சீரிய பணியானது சித்தூர் மாவட்டத்தைச் சேர்ந்த திருக்கடையூர் கிருஷ்ணதாஸாலும் குண்டூரைச் சேர்ந்த ராஜா தூமு நரசிம்மதாசுவாலும் காஞ்சியைச் சேர்ந்த வர ராமதாசுவாலும் தொடரப்பட்டது. பின்னால் சொல்லப்பட்ட இருவரும் கிருகஸ்தர்கள்; இவர்கள் தமது ஊர்களில் சங்கீர்த்தன கோஷ்டிகளை அமைத்து அன்றாடம் பஜனை செய்வதும் புகழ் பெற்ற தலங்களுக்கெல்லாம் யாத்திரை செல்வதுமாக வாழ்ந்தனர்.

1820 - 1830 இல் நரசிம்மதாசர் தென்னிந்தியாவில் தீர்த்த யாத்திரை மேற்கொண்ட போது தியாகராஜ சுவாமிகளைச் சென்னையில் சந்தித்தார். இங்கு வர ராமதாசரும் நரசிம்மதாசருடன் சேர்ந்து கொள்ளவே இருவருமாகத் தீர்த்த யாத்திரை மேற்கொண்டு பத்ராசலத்தை அடைந்தனர். பத்ராசலம் யாதவதாசரும் திருக்கடையூர் கிருஷ்ணதாசரும் செய்திருந்த யக்ஷகானங்களால் இவர்களது இராமபக்தி தூண்டுதல் பெற்றது போலும். இராமதாசர் கட்டியிருந்த ஆலயத்தில் ஸ்ரீ இராமரைத் தொழுது கொண்டும் சங்கீர்த்தன கோஷ்டிகளை நடத்திக் கொண்டும் இருவரும் சில மாதங்கள் பத்ராசலத்தில் தங்கியிருந்தனர். பின்னர் அங்கிருந்து கோல் கொண்டாவுக்கும் ஐதராபாத்துக்கும் அவர்கள் சென்று, தானிஷாவின் பழைய பட்டயத்தை மீண்டும் சுல்தான் பிறப்பிக்குமாறு செய்தனர்.

காஞ்சி வர ராமதாசு சிறந்த சங்கீத கர்த்தாவாக இருந்திருக்க வேண்டும். அவரது படைப்புகள் இராமதாசரது பாணியையே முற்றிலும் ஒத்திருக்கின்றன. நரசிம்மதாசுவுடன் பத்ராசலத்தில் தங்கியிருந்த போது அவர் தனது "இராமதாசு சரித்திரத்தை" இயற்றியிருக்கக் கூடும். பிந்திய காலத்தில் அவரது பாடல்கள் இராமதாசரது பாடல்களோடு கலந்துபோய் விட்டன. அவரது நண்பரான தூமு நரசிம்மதாசுவின் சங்கீர்த்தனங்கள் பிற்காலத்தில் ஆந்திரத்தின் கடற்கரை மாவட்டங்களில் நன்கு பரவி பிரபலமடைந்தன. இவர் செல்வந்தராகவும், ஓய்வு பெற்ற மாவட்ட அதிகாரியாகவும் இருந்ததால் பஜனை கோஷ்டிகளைப் பெரிய அளவில் இவரால் வெற்றிகரமாக நடத்த முடிந்தது. இன்றும் கோஷ்டிகளில் பாடப்படும் இவரது பாடல்கள் பலவற்றின் முதல் அடிகள் இராமதாசரது அடிகளைப் போன்றே உள்ளன; எனினும் செய்யுட்களின் வாக்கிய அமைப்பு முறையில் அவை மாறுபடுகின்றன.

பரமேஸ்வரனாகிய சதாசிவன் தனது மனைவி பார்வதிக்குத் தாரக மந்திரத்தைப் போதித்து அருளியதை முன்பு குறிப்பிட்டோம். அப்போது ஒரு உவமைக் கதையாக இராமாயணத்தையும் அதன் தாத்பரியத்தை உணர்த்துகிற வகையில் அவர் அம்மைக்குக் கூறியருளினார். இதுவே பிற்காலத்தில் "அத்யாத்ம இராமாயணம்" என்று பெயர் பெற்று, வசிஷ்டரால் இயற்றப்பட்டதாகக் கருதப்பட்டது. இதில் உள்ள இராம. கா்தை அயோத்தியின் இளவரசனும் அரசனுமான இராமனை மிக உயர்ந்த நிலையினை வகிக்கும் முழுமுதற் கடவுளாக வருணித்தது. தெலுங்கில் மிக உன்னதமானதும் அற்புதமானதுமான பல இரம்மியமான கீர்த்தனைகளை உடையது இந்நூல். இராமதாசரின் வரலாறும் பஜனை கோஷ்டிகள் மூலம் அவர் பரப்பிய இராம பக்தியுமே 18ஆம் நூற்றண்டில் முனிபல்லே சுப்பிரமணியக் கவி என்பவர் இதனை இயற்றுவதற்குக் காரணமாயிருந்தது. இக் கவியானவர் சித்தூர் மாவட்டத்தைச் சேர்ந்த காளஹஸ்தி ஜமீன்தார்களால் ஆதரிக்கப்பட்டவர். இவரது இந்தக் கதை கூறும் கீர்த்தனை வகை இராமதாசரது கீர்த்தனைகளினின்றும் மாறுபட்டது. இசையிலும் சாகித்திய அமைப்பிலும் இது அற்புதமாயிருந்தது. இராமதாசரது கீர்த்தனைகளோ எளிமையும் நேரே உள்ளத்திலிருந்து வெளிப்படும் உணர்ச்சிப் பெருக்கும் உடையவையாயிருந்தன.

யாதவதாசர் மற்றும் கிருஷ்ணதாசருடைய யக்ஷகானங் களிலிருந்தும் ஹரி கதைகளிலிருந்தும் 18ஆம் நூற்றாண்டின் இறுதியில்

இராமதாசரது வாழ்க்கையையும் கீர்த்தனைகளையும் தியாகராஜர் தெரிந்துகொண்டிருக்க வேண்டும். அப்பொழுது அவருக்கு வயது முப்பதை எட்டி இருக்கலாம். 1825 - 30இல் தூமு நரசிம்மதாசர் அவரைச் சந்தித்தார்: வர ராமதாசு கூட அவரைச் சந்தித்திருக்கக்கூடும். இந்தச் சந்திப்பு சென்னையில் வீணை குப்பய்யர் இல்லத்தில் நிகழ்ந்திருக்க வேண்டும். இதற்குப் பிறகுதான், அதாவது 1832இல், இவ்விருவரும் பத்ராசலம் சென்று சங்கீர்த்தன கோஷ்டியைப் பரப்பிய காலத்தில்தான், தங்களது "இராமதாசு சரித்திரத்தை" இவர்கள் செய்திருக்க வேண்டும்.

இராமதாசரது இராம பக்தியில் ஏராளமான மதிப்பு கொண்டிருந்தார் தியாகராஜர் என்பதையும், அவரது உத்சவ சம்பிரதாயம், திவ்ய நாமசங்கீர்த்தனம் ஆகியவற்றின் வடிவத்துக்கு இராமதாசரது உதாரணமே காரணம் என்பதையும் நாம் சிறிதும் மறுக்கமுடியாது. மேலும், எவ்வாறு இராமதாசர் பகவான் ஸ்ரீ இராமரோடு நேரில் உரையாடுகின்ற பாவத்தில் தனது கீர்த்தனைகளைப் பாடினாரோ, அதே பாணியிலேயே தியாகராஜரும் தனது கிருதிகளையும் கீர்த்தனைகளையும் புனைந்தார்.

தைரியம் குன்றாத இராமதாசர் ஸ்ரீ இராமரது அருளால் சிறையிலிருந்து விடுதலை பெற்றதைத் தான் அறிந்திருந்ததைத் தேவ காந்தாரி இராகத்தில் அமைத்த தனது "க்ஷீரசாகர சயனா" என்ற கிருதியில் இராமபிரானுக்குத் தெரிவிக்கிறார் தியாகைய்யர். இது அவரது பிரபலமான பாடல்களில் ஒன்று.

" ஏமிதோவா பல்குமா " (என்னதான் வழி எனக்குச் சொல்லேன்) என்கிற சாரங்கா இராகக் கிருதியில், "இராமதாசு போல் நான் நடந்துகொண்டிருந்தால் (அனுமதியில்லாமல் அரசுப் பணத்தை எடுத்து ஆலயம் கட்டியிருந்தால், செல்வத்துக்கெல்லாம் அதிபதியான இலட்சுமியாகிய) சீதா தேவி என்னைக் கோபித்துக் கொண்டிருப்பாள்" என்று தியாகராஜர் பாடுகிறார்.

கீரவாணி இராகத்தில் அமைந்த "கலிகியுண்டே" என்று தொடங்கும் அவரது மற்றொரு கிருதியில் நாரதர், பிரகலாதன் போன்ற இதிகாச புருஷர்களுக்குச் சமமாக இராமதாசரைத் தியாகபிரம்மம் வைக்கிறார். தோடி இராகத்தில் அமைந்த "பிருந்தாவன லோல" என்ற இன்னொரு கிருதியில் "இராமதாசுவுக்குத் தாசனான தியாகராஜன்" என்று தன்னைப் பற்றிக் குறிப்பிடுகிறார். இராமதாசர் மீது எவ்வளவு மரியாதை அவர் கொண்டிருந்தார் என்பதை இவை உணர்த்தும்.

தன்னுடைய "பிரகலாத பக்தி விஜயமு" என்ற இசை நாடகத்தில் ஒரு பாடலை இராமதாசரைப் புகழ்வதற்கென்றே ஒதுக்கியுள்ளார் தியாகராஜர். அதில் "இக் கலியுகத்தில் சிறப்பு மிக்க பத்ராசலத்தில் தோற்றமளித்துக் கொண்டிருக்கும் இராமச்சந்திரருடைய திருப்பாதங்களை வேட்கும் பக்தர்களிலெல்லாம் மேம்பட்டவரான இராமதாசுவை எனது மனம் போற்றுகிறது." என்று அவர் பாடுகிறார்.

சஹானா இராகத்தில் தியாகராஜர் பாடியுள்ள மூன்று அல்லது நான்கு கீர்த்தனைகளின் இசை அமைப்பை நாம் பார்த்தால், அவற்றில் ஒன்றான "வந்தனமு ரகு நந்தனா" என்பது வழக்கமான திவ்ய நாம சங்கீர்த்தன முறையில் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் எளிமையோடு அமைந்துள்ளது; எஞ்சிய "ஈவசுத", "கிரிபை நெலக்கொன்ன" ஆகிய கிருதிகள் சற்று அலங்காரமான முறையில் அமைந்துள்ளன. எனவே தான் முதலாவது கீர்த்தனைக்கு முன்னுதாரணமாக, சிறையிலிருந்து சீதாப்பிராட்டிக்கு இராமதாசர் வேண்டுகோள் விடுக்கும் "ஜனக தனயா" என்ற கீர்த்தனையை நாம் கருதுகிறோம். (இதன் சில வரிகளை நாம் ஏற்கெனவே கூறியுள்ளோம்.) இதே போல் இராமதாசர் கீர்த்தனைகளின் பிரதிபலிப்புகளைத் தியாகராஜரின் பல பாடல்களில் நாம் காணலாம்.

**(எனது விண்ணப்பங்களை ஏன் செவிமடுக்க மாட்டேன் என்கிறாய்?)**

இராமதாசர் : "நாமொராலகிம்பவேமய்யா" (ஆரபி இராகம்)
தியாகய்யர் : "நாமொராலகிம்பவேமி" (தேவகாந்தாரி)

**(தெய்வத்திடம் நம்பிக்கை வைக்காமல் மனிதர்களிடம் வைத்தால் மானுட ஜன்மம் ஈடேருமா?)**

இராமதாசர்: "நரஹரின! நம்ம நருலனு நம்மேதி நரஜன்மம் ஈடேருனா" (ஜஞ்ஜூட்டி)

**(ஓ கமலக் கண்ணனே, உன்னை விடுத்துப் பிறரிடம் நம்பிக்கை வைத்தால் மானுட ஜன்மம் ஈடேறுமா?)**

தியாகராஜர் : "நளினலோசன நின்னுகாக அந்யுல நம்மி நரஜன்மம் ஈடேருனா" (மத்யமாவதி)

**(கிரகநிலைகள் பற்றி நாங்கள் கவலைப் படவில்லை, ஆண்டவனது அருள் தான் எங்கள் பக்கம் இருக்கிறதே!)**

இராமதாசர்: "கிரககத்துலக்கு வெறுவ போமு மாக்குகலது"

**(கிரக பலன் எங்களை என் செய்யும்? ஸ்ரீ இராமனின் அருள் அல்லவா எங்களுக்குப் பலமாக உள்ளது!)**

தியாகராஜர் :"க்ரஹ பலமேமி, ஸ்ரீராமநுக்ரஹ பலமே பலமு" (ரேவகுப்தி)

காலமுறையிலிருந்து இது மாறுபடுகின்றது என்றாலும் கூட கடவுள் மீது வேறு வகைப் பாடல்களை, கடவுள் மீது காதலிச்சை அல்லது மதுர பக்தி கொள்ளுகிற பாடல்களை, இயற்றிய க்ஷேத்ரய்யாவைப் பற்றி இப்பொழுது சிறிது பார்ப்போம். இவர் ஒரு நூற்றாண்டுக்கும் மேலாகவே தியாகராஜருக்கு முந்தியவர்; இராமதாசருக்கு வயதில் மூத்தவர். 1650 – 55இல் இவர் கோல்கொண்டாவுக்கும் ஐதராபாத்துக்கும் விஜயம் செய்தார். அப்பொழுது இளம் இராமதாசர் பத்ராசலத்தில் தாசில்தாராக இருந்தார். அப்பொழுது கோயில் மரியாதைகளோடு பத்ராசல இராமர் ஆலயத்தில் க்ஷேத்ரய்யா வரவேற்கப்பட்டிருப்பார் எனவும் கோபண்ணாவும் குதுப் ஷாகி அரசாங்க அதிகாரியாக அவரை வரவேற்றிருப்பார் எனவும் நாம் ஊகிக்கலாம். இந்த ஊகத்துக்குக் காரணம் இல்லாமலில்லை. ஏனெனில் சுல்தான் அவையில் அப்பொழுது தான் பாடல் புனையும் போட்டியில் வெற்றி பெற்று, சுல்தானால் கௌரவிக்கப்பட்டிருந்தார். இதற்காக இறைவனுக்கு நன்றிக் கடன் செலுத்துவதற்காகவே அவர் ஆலயத்திற்கு வந்தார். நான் க்ஷேத்ரய்யாவைப் பற்றி வேறொரு நூலில் கூறியிருக்கும் மற்றொன்றையும் இங்கு கூறவிரும்புகின்றேன். க்ஷேத்ரய்யாவின் நண்பரும் இரசிகருமான துபுகுல வெங்கட கிருஷ்ணர் என்பவர் செஞ்சியில் ஆளுநராக இருந்தார். இவர் அப்பொழுது தனது பழைய கூட்டாளிகளான தஞ்சை மற்றும் மதுரை நாயக்க மன்னர்களைக் கைவிட்டுவிட்டு மீர்ஜும்லாவின் தலைமையை ஏற்று குதுப் ஷாகி அரசுப் பணியில் சேர்ந்திருந்தார். இவர் கூறியதன் பேரிலேயே சுல்தான் அப்துல்லாவின் அவைக்கு அழைக்கப் பட்டார் க்ஷேத்ரய்யா. இந்த மீர்ஜும்லாவே கோபண்ணாவைத் தாசில்தாராக நியமனம் செய்தவர்.

இராமாயண காலத்தில் சீதையை இராவணன் அபகரித்துச் சென்ற இடமான பர்ணசாலை பத்ராசலத்துக்கு அண்மையிலேயே உள்ளது. தனது துணைவியின் பிரிவுத் துன்பத்தை அப்பொழுது அனுபவித்துக் கொண்டிருந்த க்ஷேத்ரய்யாவால் இராமபிரானது துன்பத்தை முழுமையாக உணரமுடிந்தது. அதனைப் பாடல் வடிவில் அவர் வெளிப்படுத்தினார்:

**"ராம ராம பிராணசகி " (ஆஹிரி அல்லது பைரவி)**

**தனது ஆருயிர் நாயகியின் பிரிவுத் துன்பத்தை இராமரால் எவ்வாறு பொறுத்துக் கொள்ள முடிந்தது? அவர் வாழ்க! செங்கமலத்தை யொத்த கண்களையுடையவளை நினைந்து நினைந்து எனது உள்ளத்தைத் துயரம் கவ்வுகிறதே. ஐயோ நான் என்ன சொல்வேன்?**

**மாணிக்கத்தையொத்த சீதாப் பிராட்டி இல்லாமல் அவரது கண்கள் குளமாக வில்லையா! எந்த மன உறுதியும் வைராக்கியமும் இந்தக் கொடிய காதல் நோயிலிருந்து அவரைக் காத்தது? முவ்வ கோபாலா என்று என்னைப் பிரியமாக அழைக்கும் அந்த அருமைப் பெண் என்னை ஏமாற்றிவிட்டுப் போய்விட்டாளே. நான் என் செய்வேன்?**

18ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சாரங்கபாணி ஒரு சிறந்த சங்கீத கர்த்தா. இவர் சித்தூர் மாவட்டத்தில் தாமெர்ல (Damerla) குடும்பத்தைச் சேர்ந்த வெலமா அரசர்களால் ஆளப்பட்டு வந்த காளஹஸ்த்தி ஜமீன்தார் நிர்வாகத்தில் ஒரு வித்யார்த்தியாக இருந்தவர். இராமதாசரும் க்ஷேத்ரய்யாவும் புனைந்த இரு வகைப் பாடல்களையும் நிறையப் புனைந்து கீர்த்தி பெற்றவர். அதாவது. இராமதாசரின் தூய பக்திக் கீர்த்தனைகளையும் க்ஷேத்ரய்யாவின் சிருங்கார ரசப் பாடல்களையும் ஒட்டி இவர் நிறையப் புனைந்துள்ளார். இவரது இஷ்ட தெய்வம் வேணுகோபால சுவாமி. இராமதாசரைப் பின்பற்றி சாரங்கபாணி இயற்றிய சில வரிகளைக் கீழே காணலாம்.

**இராமதாசர்:** "ராமுனி நாமம் மருவம் மருவம்"
(இராமனது பெயரை மறவோம், மறவோம்)

**சாரங்கபாணி:** வேணுகோபாலுனி விடுவமு மரி, வெரொகனி பேரு நுடுவமு"
(வேணுகோபாலனைக் கைவிடோம், அவனைத் தவிர வேறு தெய்வத்தின் பெயரைக் கூடச் சொல்லமாட்டோம்)

**இராமதாசர்:** "மானசமா நீவு மறவக்குமா"
(ஓ மனசே, நீ மறந்துவிடாதே!)

**சாரங்கபாணி:** "மனசா சபலமு மனவா"
(ஓ மனமே, சபலப்படாதே!)

அரசுப் பணியில் சேருவதற்கு முன்பிருந்தே இராம பக்தராகச் சீரிய வாழ்க்கை வாழ்ந்தார் இராமதாசர். அதற்கு ஏற்ற நித்திய கர்மங்கள் பலவற்றையும் அவர் கடைப்பிடித்து வந்தார். அவை சதா இராம நாமத்தை ஜபித்துக் கொண்டிருத்தல்; ஒரு கோடி தடவை இராம நாமத்தை எழுதுதல்; இல்லத்தில் சங்கீர்த்தன சேவை புரிதல்; ஆலயத்துக்கு முன் சங்கீர்த்தன கோஷ்டி நடத்துதல்; வேத பிராமணர்களுக்கும் ஏழை எளியவர்களுக்கும் சந்நியாசிகளுக்கும் அன்னமிடல்; பிற பக்தர்களையும் கூட்டிக் கொண்டு நகரின் வீதிகளில் சங்கீர்த்தனம் செய்து உஞ்ச விருத்தியாக உணவுப் பண்டங்களை அதற்காகத் திரட்டுதல்; எளிமையாக வாழ்ந்து, ஆண்டவனை நினைந்து நினைந்து அவனைப் பற்றிய கீர்த்தனங்களையும் பிற பாடல்களையும் புனைதல்.

சாரங்பாணி, தியாகராஜர், அல்லூரி வெங்கடாத்திரி சுவாமி, பராங்குச தாசு, தூமு நரசிம்மதாசு, வர ராமதாசு போன்ற எண்ணற்ற பக்திமான்களாகிய சங்கீத கர்த்தாக்களும் இராமதாசர் வாழ்ந்து காட்டிய முறையைப் பின்பற்றியே தாமும் வாழ்ந்தனர் என்பதை அவர்களது வர்லாறுகள் தெரிவிக்கின்றன. தியாகராஜர் தொண்ணூறு கோடி தடவை இராம நாமத்தை எழுதினார் என்பது தெரிகிறது. அதேபோல் அவரும் சாரங்கபாணியும் உஞ்சவிருத்தி செய்தனர். சாரங்கபாணி அவ்வாறு வீதி வீதியாகச் சென்றபோது பக்தர்கள் எதைச் செய்யலாம், எதைச் செய்தல் கூடாது என்பதை யெல்லாம் சொல்லிக் கொண்டே போவாராம்.

# முடிவு

(தார்லி போதுமு சால தய வுஞ்சண்டி
இக மல்லிஜன்மலகு ராமு மதிலோ வுஞ்சண்டி)

(புன்னாகவராளி)

நாங்கள் மேலே போக விரும்புகிறோம். ஆம் மேலே போக விரும்புகிறோம். இன்னொரு பிறப்பை நாடி நாங்கள் பூவுலகுக்குத் திரும்ப விரும்ப வில்லை. எப்பொழுதும் உனது அருளை எங்கள் மீது பொழிவதை மறந்துவிடாதே, இறைவனே!

நாங்கள் மேலே போக விரும்புகிறோம் ......

இரு பக்கமும் பாடிக்கொண்டே செல்கிறார்கள் பக்தர்கள். மூன்று நதிகளும் சங்கமம் ஆகின்ற அந்த ஞான மார்க்கம் விரைவில் அவர்களுக்குத் தெரிந்துவிடும். "நானே பரம்பொருள்" என்கிற உண்மையை வெளிப்படுத்தும் அந்த "வாள்" கையிலே இருக்கிறது. இந்த உலக வாழ்வாகிய அந்தப் பாசக் கயிற்றை அது வேரோடு அறுத்துவிடும்.

நாங்கள் மேலே போக விரும்புகிறோம் ......

பத்ராசல இராமரின் அருள் ஒளியில், இராமதாசனது பெயர் முதன்மை பெற்றுத் திகழ, நாங்கள் மேலே போக விரும்புகிறோம், ஆம் மேலே போக விரும்புகிறோம். இன்னொரு பிறப்பை நாடி நாங்கள் மீண்டும் பூவுலகுக்குத் திரும்ப விரும்பவில்லை. எப்பொழுதும் உனது அருளை எங்கள் மீது பொழிவதை மறந்து விடாதே, இறைவனே!

இறுதியான இக்கீர்த்தனையை வைகுண்டத்தை நோக்கி இராமதாசர் பயணம் மேற்கொண்ட அந்த நாளில் பாடியதாகக் கூறப்படுகிறது. அப்பொழுது அவரது இரு மருங்கிலும பக்தர்கள் அணிவகுத்துச் சென்றனராம். இராமதாசு, பத்ராத்திரி இராமன் ஆகிய அவரது முத்திரைகள் இதில் காணப்படுகின்றன. இப்பாடல் நரசிம்மதாசும் (அல்லது சிங்காரதாசு?) வர (வரத) ராமதாசும் இயற்றிய இராமதாசர் சரித்திரத்தில் காணக் கிடக்கின்றது.

இப்பாடல் மட்டுமல்லாமல் வேறு சில அற்புதமான கீர்த்தனங்களும் கூட இந்த இராமதாச பக்தர்களால் பாடப்பட்டு இராமதாசரது சொந்த சாகித்தியங்கள் எனக் கொள்ளப்படுகின்றன போலும். இவர்கள் சேர்ந்து இயற்றிய இராமதாசர் சரித்திரம் மட்டுமே இன்று நமக்குக் கிடைக்கிறது. இந்த சரித்திரத்தின் இறுதியில் வரும் ஒரு பாடலை ஆழ்ந்து நோக்கினால் இதனை இயற்றியவர் வர

இராமதாசு மட்டுமே என்றும், அவருக்கு எப்பொழுதும் உறுதுணையாகவும் ஆலோசனை கூறுபவராகவும் மட்டுமே நாராயணதாசர் இருந்ததோடு, சங்கீர்த்தன கோஷ்டிகள் மூலம் இதனைப் பரப்பவும் செய்தார் என்றும் தெரிகிறது.

இராமதாசரின் அதிகம் அறிமுகமாகியுள்ள கீர்த்தனைகளில் ஒன்றான "எடு போதிவோ ராமா" (எங்கு சென்றனை இராமா) அவரது ஆரம்ப காலக் கீர்த்தனைகளில் ஒன்று: சிறைக் காலத்தில் இயற்றப் பட்டது. இதில் தானிஷா வருவார் என்ற குறிப்பொன்று வருகிறது. அவரது சிறை வாழ்க்கையின் இறுதியில் பாடியது "முச்சடைனா ஆடவேமிரா ராமா" என்கிற கீர்த்தனை. இதிலும் தானிஷா விசாரணைக்கு வருவார் என்ற குறிப்பு உள்ளது. முதல் பாடலில் குறிப்பிடப்படும் நிகழ்ச்சிகள் 1665இல் நடந்தவை: அதில் குறிப்பிடப்படும் தானிஷா சுல்தான் அப்துல்லா குதுப் ஷாவின் மருமகனும் பட்டத்து வாரிசுமான அபுல் ஹசன் தனாஷாவே என்பதை அத்தியாயம் 4இல் பார்த்தோம். இரண்டாம் பாடல் 1677ஐச் சேர்ந்தது: அதாவது இராமதாசர் விடுதலையாகும் சமயத்தது: இதில் கூறப்படும் தானிஷா கோல்கொண்டா அரசின் ஏழாவது சுல்தான் அபுல் ஹசன் தனாஷாவே என்று ஐயத்துக்கிடமின்றிக்கூறலாம். இவர் தெய்வ பக்தி நிரம்பிய சூஃபி. இவரது உதார குணம் நிறைந்த செயல்கள், அதாவது, இராமதாசரை விடுவித்தது, அவருக்கு உரிய எல்லா மரியாதைகளும் கிடைக்குமாறு செய்தது, பத்ராசல ஆலயத்தின் வழிபாட்டுக்காக ஜாகீர்களை அளித்தது ஆகியவை இராமதாசரோடு கூட "தனாஷா"வின் பெயரையும் சேர்த்து மக்கள் தம் மனதில் உயர்வாக வைத்து எப்பொழுதும் மரியாதையுடன் போற்றுவதற்கு வழிசெய்தது.

மேற்கூறிய அனைத்தையும் மனதில் இருத்தியே இராமதாசு சரித்திரத்தின் ஆசிரியர்கள் எழுதியது போற்றுதற் குரியது. 1830ஆம் ஆண்டு வாக்கில் சென்னையில் வீணை குப்பையர் இல்லத்தில் தியாகராஜர் தங்கியிருந்த போது இராஜா தூமு நரசிம்மதாசு அவரைச் சென்று கண்டார் என்பதை முன்பு குறிப்பிட்டோம். நரசிம்மதாசுவின் நண்பர் வரத (வர) ராமதாசு சென்னையிலோ நெல்லூரிலோ அவருடன் சேர்ந்து இருவருமாக பத்ராசலம் நோக்கினர். இவ்விருவரும் இராமதாசரைப் பற்றி ஏற்கெனவே அறிந்திருந்தனர்: பின்னர் தியாகராஜர் போன்றோர் வாயிலாக மேலும் அதிகமாக அவரைப் பற்றி அறிந்து கொண்டனர்.

அவரது கீர்த்தனைகளும், பத்ராசலம் யாதவதாசும் திருக்கடையூர் கிருஷ்ணதாசும் படைத்த "இராமதாசு சரித்திரம்" நூலும் அவர்களுக்கு மேலும் இராமதாசரைப் பற்றித் தெரிவித்தன. இராமதாசரின் கீர்த்தனைகள் சங்கீர்த்தன கோஷ்டிகள் மூலம் ஏற்கெனவே தென்னிந்தியா முழுவதும் பரவி இருக்கவேண்டும்.

நரசிம்மதாசு மற்றும் வர ராமதாசுவின் தீர்த்த யாத்திரை 1832இல் நிகழ்ந்திருக்க வேண்டும் என "நரசிம்மதாசு சரித்திரத்தின்" வாயிலாக அறியமுடிகிறது. இராமதாசுவின் புகழையும் பெருமைகளையும் பரப்ப வேண்டும் என்கிற பேராவல் அவர்களைப் பீடித்திருக்க வேண்டும்; அதுவும் தியாகராஜர் போன்றோரின் புகழுரைகளை அவர்கள் கேட்டபின் இந்த் ஆவல் அதிகரித்திருக்க வேண்டும்.

இவ்வாறு அளவற்ற உந்துதல் பெற்ற இவர்கள் "இராமதாசு சரித்திரத்தை" எழுதத் தொடங்கினர். அவரது கீர்த்தனங்கள் மூலமாகவும் பிற ஞானிகள் கூறியதைக் கேட்டதன் மூலமாகவும் இராமதாசுவின் உள்ளத்தையும் உந்துதல்களையும் அவர்களால் முழுமையாக அறிந்துகொள்ள முடிந்தது. இதனால் அவர்கள் எழுதிய சரித்திரம் இராமதாசரின் செயல்களையும் சிந்தனையையும் அப்படியே படம் பிடித்துக் காட்டமுடிந்தது.

தூமு நரசிம்மதாசு முதலியோரைச் சந்தித்த பின் பதினைந்து இருபது ஆண்டுகள் சென்றபின் (1847இல்) தியாகராஜர் ஒரு கனவு கண்டார். அதில் அவரது இஷ்ட தெய்வமான பத்ராசலம் ஸ்ரீ இராமர் பத்து நாட்களில் அவரைக் காப்பாற்றப் போவதாகத் தெரிவித்தார். இத் தகவலை அவரது "கிரிபை நெல கொன்ன ராமுனி" என்ற கீர்த்தனை மூலம் நாம் அறிந்துகொள்கிறோம்.

> **என் மேனி முழுவதும் முத்து முத்தாகக் கொப்புளங்கள் கிளம்பி என்னை வதைத்தன. அப்போது (பத்ரா) மலைமீதமர்ந்த என் இராமபிரான் என் கனவில் தோன்றி பத்து நாட்களில் என்னைக் காப்பதாகத் தெரிவித்தார். நான் என் தெய்வத்தைக் கண்ட பரமானந்தத்தை என்னவென்று சொல்வேன்! எனது நோக்கம் நிறைவேறிற்று.**

திருவையாற்றில் இப் பாடலை இயற்றிப் பத்து நாட்கள் கழிந்த பின் தியாகராஜர் தனது பக்தர்கள் புடைசூழ்ந்து சங்கீர்த்தன

கோஷ்டியாக இசை முழக்கம் செய்ய இறைவனைப போற்றி செய்து கொண்டே தனது பூதவுடலை நீத்து வைகுண்டம் நோக்கினார். இது நிகழ்ந்தது புஷ்ய மாதம் கிருஷ்ண பட்சம் ஐந்தாம் நாள் எனவும். அதுகாலை ஏராளமான பக்தர்களோடு தூமு நரசிம்மதாசும் அங்கிருந்தார் எனவும் பேராசிரியர் சாம்பமூர்த்தி எழுதுகிறார்.

தியாகராஜ சுவாமிகள் தனது வாழ்நாள் முழுவதும் தான் ஸ்ரீ இராமரின் பாதகமலங்களில் சரண் புகுந்தவன் என்றே கருதி வந்தார். இந்த அவரது சரணாகதியைத்தான் அவரது கீர்த்தனை ஒன்றில் "ஓ தாசரதீ, நான் உனது அடிமை" ("தவ தாசோகம்") என்ற வரியில் நாம் கேட்கிறோம். இராமதாசரும் இவ்வாறு தான் தன்னை இராமரின் அடிமை என்றே கருதி வந்தார். தனது வாழ்வின் இடைக் காலத்தில் தியாகராஜருக்கு த்வைதம், அத்வைதம் ஆகிய இரண்டுக்குமிடையில் ஒரு ஊசலாட்டம் இருந்தது. பகவானே, நீ எங்கே சுகம் காண்கிறாய், "த்வைதமு சுகமா அத்வைதமு சுகமா", என்று ஒரு கிருதியில் அவர் ஆண்டவனைக் கேட்டார். தொடர்ந்து அனுபல்லவியில் மேலும் கேட்கிறார்: "சைதன்யமா. விநு சர்வசாக்ஷி விஸ்தராமுகாநு தெலுபுமுநாதோ" (சர்வசாக்ஷியான சைதன்யமே. இதற்கு உண்மையான விடையினை எனக்குக் கூறுவாயாக). எங்கும் எதிலும் ஊடுருவி நிறைந்து விளங்குகின்ற பரம்பொருள் என்று இறைவனைப் புகழ்கின்ற தியாகராஜரே "இதற்கு விடை, இரண்டும் கலந்த விசிஷ்டாத்வைதமே" என்று கூறுவதுபோல் உள்ளது.

உலகை நீத்துப் போகும் நேரத்தில் இராமதாசர் இசைத்த அக்கடைசி கீர்த்தனத்தில் (இது இந்த அத்தியாயத்தின் துவக்கத்தில் கொடுக்கப் பட்டுள்ளது) இதனால் தான் "சோஹம்" (நானே பரப்ரம்மம்) என்கிற தத்துவச் சொல்லைப் பயன் படுத்துகிறார். வாழ்வின் இறுதிக்கட்டத்தில் இராமதாசரின் சிந்தனைப் போக்கினை இது தெளிவாக்குகிறது.

இராமதாசு சரித்திரத்தில் வரும் இணைப்புக் கட்டுரைகளைப் படித்தால் தனது இறுதிப் பாடலைப் பாடிக் கொண்டே அவர் பத்ரா குன்றில் உச்சியை அடைந்த போது தேவ தூதர்கள் வந்து அவரை ஒரு விமானத்தில் ஏற்றிக் கொண்டு வைகுண்டத்துக்கு அழைத்துச் சென்றனர் என்று தெரிகிறது. யக்ஷகானங்களும் இதே செய்தியைத் தெரிவிக்கின்றன. இதனை ஆராய்ந்த பகுத்தறிவுவாதிகள் இராமதாசர் அக்குன்றின் மீதிருந்து கோதாவரியினுள் பாய்ந்து

உயிர்விட்டார் எனக் கருதுகின்றனர். எல்லையில்லாத பரம்பொருளில் கலந்து க்ரைந்து போகக் கருதும் ஒரு ஆன்மாவுக்கு ஒரு நதியின் ஆழமும் மலையின் உச்சியும் இறையுலகிலிருந்து விலகியுள்ளதாகத் தோன்றாது.

"தூமு நரசிம்மதாசு சரித்திரம்", நரசிம்மதாசும் அவரது சக பக்தர்களும் கோதாவரியில் கீர்த்தனங்களை இசைத்துக்கொண்டே படகில் சென்று கொண்டிருந்தனர் என்றும், அப்பொழுது அவர்கள் (ஏற்பாட்டின் படி) படகு கவிழ்ந்தது என்றும், மிக்க ஆர்வத்துடன் நரசிம்மதாசு நீரோட்டத்தில் மூழ்கி இறைவன் திருவடிகளை நண்ணினார் என்றும் தெரிவிக்கிறது.

இன்னொன்றை இங்குக் கூறுவதும் மிகையாகாது எனக் கருதுகிறேன். அயோத்தியை ஆண்டுவந்த ஸ்ரீ இராமருக்கும் இப்படியானதொரு முடிவே ஏற்பட்டது. அவர் வெள்ளப் பெருக் கெடுத்தோடும் சரயூ நதிமீது நடந்து செல்கையில் வைகுண்டத்திலிருந்து ஒரு புஷ்பக விமானம் வந்து அவரை அவரது இருப்பிடமான வைகுண்டத்துக்கு அழைத்துச் சென்றது. பக்தர்களும் ஞானிகளும் பரம புருஷர்களும் பூவுலகில் தாங்கள் ஆற்றப் பிறந்த காரியங்களை முடித்துக்கொண்டு, இதையொத்த வழிகளிலேயே இறுதியாகப் பரம்பொருளை அடைவர் என்பதே மரபு போலும்.

முடிவும் முதலுமாக ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஐக்கியமுறும் போது, விண்ணுலகில் பரம்பொருளோடு கலக்கின்றன. தியாகபிரம்மமும் இராமதாசரும் தமது கடைசிப் பயணத்தின் போது பாடிய கீர்த்தனங்கள் ஒரே உண்மையை உணர்த்துவதை நாம் காணலாம். தியாகராஜர் அப்பொழுது பாடிய பாடலின் சில வரிகள் அடியில் தரப்பட்டுள்ளன. இராமதாசர் பாடியதோ "இராமனைப் பற்றிய எல்லாமே ஒளிமய்ந்தான்" என்று பொருள்படும் "அந்தா ராம மயம்" என்பது. இது கடைசி அத்தியாயத்தின் இறுதிவாக்கில் கொடுக்கப் பட்டுள்ளது.

"பரமாத்முடு வெலிகே முச்சட" (வாக்தீஸ்வரி)

**அரி, அரன், தேவர்கள், சிறந்த மனிதர்கள், மற்றும் எண்ணிக்கைக்கு அடங்காத அனைத்துப் பிரபஞ்சங்களிலும் பரமாத்மாவின் ஒளி பிரகாசிக்கும் விதத்தினை நீ அனுபவத்தில் உணர்ந்து நன்றாக அறிந்துகொள்வாயாக!**

# தாசரதி சதகத்திலிருந்து சில செய்யுட்கள்

(குறிப்பு: ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம் செய்யப்படுகிறது. முந்திய அத்தியாயங்களில் செய்தது போலவே, சுவை கருதி உரைநடையில் பாடல்கள் தரப்படுகின்றன – மொ.ர்.)

### *1. "குருதரமைன காவ்யரச கும்பனா"*

அற்புதமான கவிதாரசம் நிரம்பிய, ஆச்சரியப் படத்தக்க வகையில் புனையப் பட்டுள்ள கவிதைகளை நல்ல மனமில்லாத மனிதர்களால் ரசிக்கமுடியுமா என்ன? சந்திரகாந்தக் கற்கள் நிலவின் குளிர்ந்த கிரணங்கள் பட்டதும் மெழுகாய் உருகிவிடும். ஆனால், ஓ தாசரதீ, விந்திய மலையின் கடினமான பாறைகளோ இருந்த இடத்தைவிட்டுச் சற்றுகூட நகரமாட்டா.

### *2. "தாருணா படகாப்திக்கி சாத படபாக்னி"*

மிகக் கொடிய பாவங்களாகிய பெருங்கடலின் அளவில்லாத நீரினையும் வற்றச் செய்யும் வல்லமை படைத்த எரிமலையின் அக்னி எது? வாழ்க்கைத் துன்பங்கள் எனும் பரவலான காட்டுத் தீயினை அணைக்கத் கூடிய விண்ணினின்றும் சொரியும் அமுத மழை எது? உயிரில்லாது சாய்ந்துபோன எண்ணிலடங்கா நம்பிக்கைகளும் வழக்கங்களுமாகிய இக்காட்டை வெட்டிச் சாய்க்க வல்ல கூரிய கோடரி எது? அவை உன்னுடைய தாரக மந்திரமே! ஓ, தாசரதீ, கருணைக்கடலே! அந்த மந்திரம் மட்டுமே மோட்சமாகிய கரையை நோக்கி ஆன்மாக்களை ஏற்றிச் செல்லும் தோணியாகும்!

### *3. "ஸ்ரீ ராம சீத்த காக"*

மகாலக்ஷ்மியே சீதாப் பிராட்டியாக வந்தாள் வைகுண்டத்திலுள்ள உனது பணியாட்களே வைணவப் பட்டாச்சாரியார்களாக வந்துள்ளனர். விரஜாவே கோதாவரி நதியாக ஓடுகிறது. வைகுண்டத்தின் ஆன்மீக மணம் பத்ரா குன்றைச் சுற்றிக் 'கமழ்கிறது. ஓ தாசரதீ, கருணைக் கடலே,

நீ யல்லவோ மகாவிஷ்ணுவாக, எல்லோருக்கும் புதிய வாழ்வினைக் கொடுக்கக் கூடியவனாக அங்கே அமர்ந்திருக்கிறாய்!

### 4. "'ரா' கலுஷம்புலெல்ல"

"ரா" என்ற எழுத்து எல்லா மாசுகளையும் விரட்டி ஓட்டுகிறது. "மா" வானது உடனே வாசற்கதவுகளை அடைத்துவிடுகிறது. விவேகம் நிறைந்த மனிதர்கள் கூட இவ்விரு எழுத்துகளையும் பக்தியோடு உச்சரிக்கும் வழியை இன்னமும் அறிந்துகொள்ளவில்லையே! அறிந்திருந்தால், ஓ தாசரதீ, கருணைக்கடலே, பின் ஏன் உலக மக்கள் இவ்வளவு நாசங்களை இடைவிடமால் அனுபவிக்கிறார்கள்?

### 5. "கத்தரி யோகி ஹ்ருத் கமல் கந்த்தா"

ஓ இராமச்சந்திரா, பண்பட்ட முனிவர்களின் இதய கமலங்களில் மிக்க ஆர்வத்தோடு மொய்க்கின்ற தேனீ நீ! நில மகளின் வயிற்றில் உதித்த சீதாப்பிராட்டியின் தழுவலில் களிப்போடு பாடுகின்ற கிளியும் நீ! மோட்ச செல்வத்தை அளிக்கின்றவனும் நீயே! ஓ தாசரதீ, கருணைக் கடலே, இன்றைக்கு நீ வரமாட்டாயா?

### 6. "கலியுக மர்த்திய கோட்டி"

இக்கலியுகத்தில் கோடி கோடியான ஜனங்களின் பார்வைக் கெட்டாமல் மறைந்து வாழ்வது தான் உனது முறையா? பக்தர்களை ரக்ஷிக்கும் உனது சத்தியம் என்னவாயிற்று? பயங்கரமான துயரக் கடலில் நான் மூழ்கியிருக்கும் வேளையில் எனது கூக்குரல் உனக்குக் கேட்கவில்லையா? அல்லது மறதியாயிருந்து விட்டாயா? மனிதர்கள் எப்படிக் குறைகூறமுடியும்! ஓ தாசரதீ, கருணைக்கடலே, சீதாதேவி தன்னந் தனியாகச் சிறை வைக்கப் பட்டிருந்ததாவது உன் நினைவில் இருக்கிறதா?

### 7. " பலமுலொந்துவேலா"

ஓ தாசரதீ. கருண்ணைக்கடலே! பாவங்களின் பலன்களையும், போர், பாம்பு, பேய், ஜுரம், வியாதி போன்றவற்றையும் உன் மீது பக்தி பூண்டு உனது உத்தரீயத்தையே விடாமல் பிடித்துக்

கொண்டிருக்கும் ஒருவன் அனுபவிக்கும்போது நீயும் உன் இளவலும் இரு பக்கமும் நின்று அவனைக் காக்கிறீர்கள்!

### 8. "வனகாரி சிக்கே மைனசாக்கு"

தன் மீதிருந்து வீசுகின்ற சுகந்தத்தினாலேயே காட்டு யானை மதங் கொண்டு விடுகிறது. மேலும் அதிகம் விழுங்கவேண்டும் என்ற பேராசையாலேயே மீனுக்கு அழிவு வந்துவிடுகிறது. செவிமடுக்க வேண்டும் என்கிற இச்சையால் பாம்பு தன்னையே மறந்து லயித்துப் போகிறது. அழகிய கண்களை யுடைய மானுக்குக் கண் நோய் வந்துவிடுகிறது. மகரந்தத்தைவிட்டு நீங்க மனமில்லாமல் நெடு நேரம் அதிலேயே இருந்துவிடுவதால் தேனீக்கு மூச்சு அடைத்துப் போகிறது ஐம்புலன்களையும் வெல்லக் கூடிய வல்லமை எந்த மனிதனுக்கு இருக்கிறது? ஓ தாசரதீ, கருணைக் கடலே, நீயல்லவோ அவற்றை வெல்லக்கூடிய ஆயுதங்களைத் தந்தருள வேண்டும்!

### 9. "வாரிஜ பத்ரமந்திதின வாரி விதம்புனா"

ஓ தாசரதீ, கருணைக்கடலே, தாமரை இலை மீது தண்ணீர் போல ஒருவன் பற்றற்றவனாகத் தன்னுடைய நாட்களைக் கழிப்பவனாகவும் தீயதிலிருந்து நல்லதை இனங்கண்டு கொள்பவனாவும் இருந்தால் அவனால் பிரம்மத்தை அடையமுடியாதா என்ன?

### 10. "பட்டிதி பட்டாரராரிய குரு பாதமுலு"

எனது குரு பட்டாரராரியரின் புனிதமான பாத கமலங்களைப் பற்றினேன் நெற்றியில் வெள்ளையும் சிவப்புமான திருநாமம் அணிந்தேன். எம தூதர்களையும் வாயிலிலிருந்து விரட்ட வல்ல தாரகமந்திரத்தைப் பெற்றேன்: ஓ தாசரதீ, கருணைக். கடலே, உனது பாதாரவிந்தங்களில் எனது நெஞ்சை இருத்தி, பாவ வினைகள் அனைத்தையும் விரட்டித் தள்ள என்னால் முடிந்தது.

# இராமதாசரது சில கீர்த்தனைகள்

***1. "ஏதிருக் நனு தய ஜூசேதவோ" (நாதநாமக்கிரியை)***

உனதருளை என் மீது எவ்வாறு பொழியப்போகிறாய், இராமா! சூரிய குலத்தில் தோன்றிய ஈடில்லாத் தனையனே! தாமரை புரையும் கண்களை யுடைய ஓ இராமா, வாழ்க்கையாம் பெருங்கடலைக் கடப்பது எனக்கு இயலுமா? இரகு குலத் திலகமே, சீதை மணளா, சரணடைந்தவர்களுக்கு அடைக்கலம் நல்கும் கருணாநிதியே! கோசலையின் மணிவயிற்றில் அவதரித்த மாணிக்கமே! கூறுவாயாக. நீயே எனது தலைவனென்று நீண்ட காலத்துக்கு முன்பே நான் அறிவித்துவிட்டேன். என்னை உன் அடிமையாக ஏற்றருள். அறியாமையால் நான் புரிந்துவிட்ட எனது குற்றங்களைக் கணக்கிடாதே இராமா! தெய்வங்களுக்கெல்லாம் தலைவனாகிய இராமா, எனது கொடிய ஏழ்மையைப் போக்கியருள்.

ரிஷிகளும் வேதங்களும் நீயே பிரபஞ்சத்தின் ஆசான் என்றும், நீயே எனது தெய்வம் என்றும் அறிவித்திருந்தும், ஊரையெல்லாம் சுற்றிக் கொடியனாகி அப்போதனைகளை நான் மறந்தேன், ஐயனே.

ஊழிக் கூத்து காலத்தில் அனைத்து அண்டப் பிண்டங்களுக்கும் பிறப்பிடமாகிய பரமாணு நீயே என்ற உண்மை வெளிப்பட்டது. பகையிலும் துன்பத்திலும் ஒருவன் சிக்கித் தவிக்கும் காலத்தும் உன்னைப் போற்றினால் அவனுக்குப் பரமானந்தத்தை நீ அருள்கிறாய்!

இந்திரன், பிரமன் முதலிய தெய்வங்களும் கைகூப்பி உன் சந்நிதானத்தில் வணங்கி நிற்கிறார்கள். அனைத்துக் கல்யாண குணங்களும் நிரம்பப் பெற்ற ஒளி திகழும் இராமனே, பத்ரா மலையின் அதிபதியே, பக்தர்களை ரக்ஷிக்கிறவன் என்று இந்திரர்களாலும் துதிக்கப்படுகிற பெருமாளே, அயோத்தி அரசனே, தாசரதீ, எளியோர்கள் அனைவரும் சரணடைகின்ற கற்பகமே, இரகு குலத்தில் தோன்றிய வள்ளலே, அச்சத்திலிருந்து எனக்கு விடுதலை நல்குவாயாக!

**2. "தக்குவேமி மனகு ராமுடு ஒக்கடுண்டு வரக்கு (சௌராஷ்டிரம்)**

இராமபிரான் நம் பக்கத்திலும் முன்னாலும் சக்கரத்தைக் கையிலேந்தி நிற்கையில் நமது எந்த விருப்பம் தான் நிறைவேறாமல் போகும்!

வேதங்களைத் திருடிய அந்தச் சோமகனைக் கொன்ற பரம்பொருள், மீனாக அவதரித்து நம் பக்கத்தில் நிற்கையில் எந்த விருப்பம் தான் நிறைவேறாமல் போகும்!

தேவர்களைக் காப்பதற்காக மந்தர மலையைத் தூக்கிய கூர்மமாக அவதாரம் செய்தவன் நம்மீது அருள் பாலித்துக் கொண்டிருக்கையில் எந்த விருப்பம் தான் நிறைவேறாமல் போகும்!

தீயனாகிய இரண்யாக்ஷனை வதம் செய்வதற்காகக் காட்டுப் பன்றியின் வடிவைத் தாங்கியவனே நமக்குப் பாதுகாவலனாக இருக்கையில் நமது எந்த விருப்பம் தான் நிறைவேறாமல் போகும்!

நரசிம்ம அவதாரமெடுத்து இரண்யகசிபுவை இரண்டாகக் கிழித்த அந்த ஆண் சிங்கமே நம் அருகில் இருக்கும் போது எந்த விருப்பம் தான் நிறைவேறாமல் போகும்!

மூவுலகையும் ஈரடியால் அளந்த அந்தக் குள்ள வடிவம் தரித்த வாமனனே நாம் வணங்கும் தெய்வமாக இருக்கையில் எந்த விருப்பம் தான் நிறைவேறாமல் போகும்!

பல க்ஷத்திரிய குலங்களை வேரறுத்த கோபம் தணியாத அந்தணன் பரசுராமன் நம் பக்கத்தில் நிற்கும் போது எந்த விருப்பம் தான் நிறைவேறாமல் போகும்!

இலங்கேசன் இராவணனின் பத்து தலைகளையும் கொய்த தாசரதியின் பேரருளுக்கு நாம் உரியவர்களாக இருக்கும் போது எந்த விருப்பம் தான் நிறைவேறாது போகும்!

இப் பூவுலகில் யாதவ குலக்கொழுந்தாகத் தோன்றிய பலராமரது பெருந் துணை நமக்கு இருககும் போது நாம் விரும்பும் எது தான் நிறைவேறாது போகும்!

கொடியவன் கம்சனை .வதம் செய்த கிருஷ்ணனாகிய பரம் பொருளே நம்மீது அருளைப் பொழிந்து வரும்பொழுது நாம் விரும்பும் எது தான் நிறைவேறாது போகும்!

கலி யுகத்தில் அவதாரம் செய்யக் கூடிய கல்கியே நம்மைக் காத்து நிற்கையில், தனது பக்தர்களைத் தவறாமல் காத்திடும் பரம்பொருளாகிய நாராயணனையே நாம் நம்பி இருக்கையில் எந்த விருப்பம் தான் நிறைவேறாமல் போகும்!

### 3. "கருடகமன ராரா" (கல்யாணி)

கருடாழ்வாரை ஊர்தியாக உடைய ஆண்டவனே, கீழே வந்து உனது அருளைச் சொரிந்து எங்களைக் காப்பாயாக! புகலிடம் ஏதுமின்றி உன்னையே சரணடைந்த என்னை ஒதுக்கி விடாமல் காத்தருள்வாய், பரம்பொருளே!

கருடாழ்வாரை ஊர்தியாக உடைய ஆண்டவனே, விரைந்து வந்து என்னைக் காப்பாயாக! உன்னையே நான் இடைவிடாமல் துதிக்கிறேன்; நான் வாழ் நாள் முழுதும் பாடிப் போற்றி வரும் இறையே, எனது வளமும் வலியும் நீயே அல்லவோ!

பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கும் கமலக் கண்ணனே, தசரத மகாராஜனின் அருமந்த புத்திரனே, என்னையும் உனது அருளாகிய பாலிலும் நீரிலும் மூழ்க வைக்கமாட்டாயா? நான் உன்னையே என் தோணியாகக் கொண்டேன், காலந் தாழ்த்தாதே ஐயனே! கருடனை ஊர்தியாகக் கொண்ட பெருமாளே!

கருட வாகனா, ஏன் தாமதிக்கிறாய்? ஏன் என்னைக் காவாமல் காலம் கழிக்கிறாய்? உன்னைத்தானே எனது இறைவனாகக் கொண்டுள்ளேன்! வள்ளலே, ஏன் வர மறுக்கிறாய்?

கருடனின் மீது சஞ்சரிக்கின்ற பெருமாளே, ஏன் இவ்வளவு பிடிவாதமாயிருக்கிறாய்? பத்ரா குன்றின் மேலமர்ந்த கருணை வெள்ளமே, என் உள்ளத்தின் ஒளியே நீ தானே, ஐயனே! இந்த இராமதாசனைக் காத்தருள்வாயாக!

### 4. "என்னகனு ராம பஜனா" (பந்துவராலி)

இராமபிரானுடைய திருப்புகழை இசைப்பதைக் காட்டிலும் பெரிய காரியம் உலகில் வேறு என்ன உள்ளது? மனமே, சதா காலமும் இராமச்சந்திரனையே தியானம் செய். அவன் புகழையே பாடு. அதைவிடப் பெரிய காரியம் என்ன உளது? பத்ராசலம் அமர்ந்த ஸ்ரீராமன், இராமா இராமா என்று தான் ஜபிக்கும் போதே தான் வளர்த்த கிள்ளையும் அவ்வாறே

சொல்லப் பயிற்று வித்தாளே ஒரு பெண், அவளது ஆசைகளைப் பூர்த்திசெய்து. அவளுக்குப் பரமபதமும் அளிக்கவில்லையா? அவனைப் பாடுவதை விடப் பெரிய காரியம் என்ன உளது?

பெண்குலத்துக்கே முன்மாதிரியான இலக்கணமாக இருந்தாளே அகலிகை, அவ்வள் சாபத்துக்கு ஆட்பட்டுப் பின் இராமனது கால் பட்டு சாபவிமோசனம் பெற்றாளே, வெயிலிலும் மழையிலும் கல்லாய்க் கிடந்து அவள் எவ்வளவோ துன்பத்தை அனுபவித்தாலும் ஸ்ரீராமனுடைய பெருமையை உலகுக்கு உணர்த்தினாள் அல்லவா? அவனைப் பாடுவதை விடப் பெரிய காரியம் என்ன இருக்கிறது?

**5. "ஸ்ரீ ராமா நீ நாமம் ஏமி ருசிரா" (பூர்வி கல்யாணி)**

ஓ ஸ்ரீ ராமா, உன்னுடைய பெயர் எவ்வளவு·இனிமையான்து! வார்த்தைகளுக்கு எட்டாத இனிமையுடையது அல்லவா! கஜேந்திரனையும், பிரகலாதன் சுக்ரீவன் விபீஷணன் ஆகியோரையும் ரக்ஷித்த உனது நாமத்தின் தெய்வீகச் சுவையினை எவ்வாறு வருணிப்பது? எவ்வளவு இனிமையுடையது உன் பெயர்!

வாழைப் பழமும் பேரீச்சையும் அதற்கு இணையாகுமா, ராமா? வீழ்ந்துபோன ஜீவன்களையும் அது ரக்ஷிக்குமே, எவ்வளவு இனிமையானது உன் பெயர்!

பலாப்பழம், ரோஜா மலர், திராட்சை, மாம்பழம் போன்றவையும் அதற்கு ஈடாகுமா, ராமா? ஆஞ்சனேயனது இதயத்தில் குடியிருப்பதல்லவா அது! ஓ உன் பெயர் எவ்வளவு இனிமையானது!

பரமபதத்தை அளித்து நித்திய ஆனந்தத்தில் ஒருவனை ஆழ்த்துமே உன் திரு நாமம்! இறைவன் சதாசிவன் கூட அல்லவா அதனை உச்சரித்துத் தியானம் செய்தான். எவ்வளவு இனிமையானது உன் பெயர்!

வாழ்க்கையாகிய சாகரத்தை நீந்திக் கடப்பதற்கான தோணியல்லவா உன் நாமம்! அது எவ்வளவு இனிமையானது! அதன் இனிமையை எப்படி மதிப்பிடுவது?

உன்னையே சரண் என்று அடைந்தவர்களுக்குப் பரமபதத்தை நல்குவதாயிற்றே உன் திருநாமம்! எவ்வளவு இனிமையானது அது!

பக்தர்களால் தம்பூராவில் சேர்த்து பாடப்படுவதும் நாரதரால் எப்பொழுதும் இசைக்கப் படுவதும் உன் திருநாமமே! அதன் இனிமையை எப்படி வருணிப்பது?
அதில் தான் எவ்வளவு இனிமை பொதிந்துகிடக்கிறது! பத்ராசலம் இராமதாசனை ஆட்டிப் படைப்பது அதுவல்லவோ! உன் நாமம்தான் எவ்வளவு இனிமையானது இராமா! எவ்வளவு இனிமையானது!

### *6."சீதாராம ஸ்வாமீ நீ ஜேசின நேரமுமேமி"* (*சாவேரி*)

ஓ சீதாராமா, எனது குற்றம் தான் என்னவென்று சொல்லேன். செந்தாமரையினை ஒத்த உனது பாதங்களையே நான் சதா தியானித்துக் கொண்டிருந்தேனே, அதிலே ஏதாவது குற்றம் புரிந்துவிட்டேனா? ஓ சீ தாராமா, சொல்லமாட்டாயா?
எனது கைவிரல்களுக்கு நவரத்தினங்கள் பதித்த மோதிரங்கள் நான் கேட்டேனா? அல்லது விலையுயர்ந்த ஆடைகள், சால்வைகள் வேண்டுமென்று கேட்டேனா? சொல் சீதாராமா!
சுற்றிலும் அமர்ந்திருக்கும் பண்டிதர்கள் கண்டு வியப்பதற்காக எனது காதுகளுக்குப் பொற்குண்டலங்கள் செய்து கொடு என்று கேட்டேனா? அல்லது மாதர்கள் மனதை மகிழ்விப்பதற்காகக் கழுத்துக்கு முத்து மாலையும் தங்கச் சங்கிலியும், கால்களுக்குப் பொற்சதங்கைகளும் கேட்டேனா? என்ன கேட்டேன் சொல் இராமா?
என் தலையில் அணிய நவரத்தின கிரீடம் உன்னிடம் கேட்டேனா? அல்லது நீ உன் கழுத்தில் அணிந்திருக்கிறாயே, அதைப் போன்ற அழகிய மலர் மாலை வேண்டுமென்று விரும்பினேனா? சொல்லப்பா!
தயக்கத்தையெல்லாம் அடகு வைத்துவிட்டு, உன்னுடையது போன்ற பிற ஆபரணங்கள் எனக்கு வேண்டுமென்று உன்னைக் கேட்டேனா? நான் வேறு என்னதான் கேட்டேன், சீதாராமா? கமலக் கண்ணனாகிய உந்தனுக்குப் பணிசெய்ய அருள்புரிவாய் என்று மட்டும் தானே நான் வேண்டினேன்! சொல் ஐயனே!
உன் பாதங்களை அணிசெய்யும் கொஞ்சும் சலங்கைகளைக் கேட்டேனா? உன்னுடைய யானை குதிரைகளை எனக்குத் தருவாய் என்று எதிர்பார்த்தேனா? அல்லது உனது பட்டுப்

பீதாம்பரத்தைக் கொடு என்று கேட்டேனா? ஓ காமன் தந்தையே, என்னுடைய வசதிக்காக ஏதாவது செல்வத்தை உன்னிடமிருந்து என்றாவது எதிர்பார்த்தேனா? என்ன சொல்வாய் இராமா?

நீயே பத்ராசலத்தின் அதிபதி. ஆகையால் அங்கு என்னை அரசனாக்கு என்று வேண்டினேனா? ஓ தசரத மகாராஜனின் செல்வ மகனே, பிறருக்குத் தானம் செய்துப் புகழடைய எண்ணி உன்னுடைய ஆபரணங்கள் எவையேனும் கேட்டேனா? எனது ஜீவனத்துக்கு மிகச் சொற்ப நிலம் தவிர வேறு ஏதாவது கொடு என்று கேட்டேனா? சொல் சீதாராமா!

### 7."பலுகே பங்கார மாயனா" ( ஆனந்த பைரவி)

தோல்வியறியாத வில்லை ஏந்தியவனே, தங்கத்தைப் போல் விலை உயர்ந்ததல்லவா உன் வார்த்தை? அது தங்கத்தைப் போல் அரிதாகவும் அல்லவோ இருக்கிறது! என்னுடைய அழைப்புகட்கு ஏன் செவி சாய்க்கமாட்டேன் என்கிறாய், அப்பனே? கனவில் கூட உனது திரு நாமத்தைத் தியானிப்பதை நான் மறவேனே.

மணலில் புரண்ட அணிலின் சேவைக்குக் கூட அல்லவா நீ கருணை சுரந்து அருள் பாலித்தாய்! இதனை அறிந்து உன்னையே என் தந்தையெனக் கொண்டு உன் மீது நான் நம்பிக்கை வைத்தேன் இறைவனே! உன் வார்த்தை பொன் போன்றது அல்லவா?

இப் புவியின் மீது உனது கீர்த்தியை யெல்லாம் நான் அறிவேன், கல்லைப் பெண்ணாக்கியவன் அன்றோ நீ! எனது அருமைத் தந்தையே, உன்னையே நான் சதம் என்று நம்புகின்றேன், ஐயனே! உன் வார்த்தை பொன் போன்றது அல்லவா?

எவ்வளவு நீண்ட காலமாக உன்னை நான் தொழுதும் பிரார்த்தித்தும் வருகிறேன்! ஆனால் நீ எனக்குக் காட்டிய கருணைதான் எவ்வளவு? ஒரு சிறு மணல் அளவு கூட அது இல்லையே! உனது வார்த்தை பொன் போன்றது அல்லவா?

உன்னோடு போட்டி போட்டுக் கொண்டு நானும் பிடிவாதமாயிருக்க முடியுமா; ஐயனே? நான் சின்னஞ் சிறிய ஜந்துவல்லவா? நீ கருணா மூர்த்தியாயிற்றே, பக்தர்களைக்

காப்பவனாயிற்றே! உன் பெயரே அதுதானே! எனவே, பத்ராசலம் இராமதாசன் மீது உனது கடைக்கண் பார்வையைத் திருப்பு, சுவாமி! உன் வார்த்தை பொன் போன்றது அல்லவா?

### 8. "ஆதரணமேனி நாம மந்த்ர பட்டனா அத்ரித்ஜா ஏமெனி சேசாரா" (கல்யாணி)

மரியாதை தெரியாத ஒருவனது நாமத்தை எவ்வாறு பார்வதி தேவி தியானித்தாள்? நீ உண்மையாகவே என் மீது அன்புடையவனாக இருந்தால், என்னோடு பேசுவதன் மூலம் அதை நீ நிருபித்துக் காட்டலாமே? பார்வதி எப்படி தியானித்தாள்?

காலை வாரிவிடும் இயல்புடைய உன்னை அனாதைகளின் பங்காளன் எனப் பிரகலாதன் எப்படி ஏமாந்து போனான்? கற்பு நெறியில் தலைசிறந்த ஒரு பெண்ணைக் காட்டுக்கு அனுப்பிய ஒரு தீயவன் எப்படி கருணாமூர்த்தியாக இருக்கக் கூடும்? பார்வதி அவனை எப்படி தியானித்தாள்?

சிருஷ்டிக் கடவுளான பிரம்மதேவன் உன்னையே பரமன் என்று எப்படி ஏமாந்துத் துதித்தான்? மற்றவரின் மனைவிகளோடு உனது உறவுகளைத் தெரிந்தும் உன்னை எப்படி இலக்குமி தேவி பாராட்டமுடிந்தது? பார்வகி எப்படி தியானித்தாள்?

நீ ஒரு கள்ளனாயிற்றே, சபரியிடம் எச்சில் பழத்தை உண்டவனாயிற்றே! உம்மை எப்படி நம்புதல் கூடும், தெய்வம் என்று அழைத்தல் கூடும்? நான் கூறுவதெல்லாம் உண்மை. இராமா! உன்னை எப்படி பார்வதி தியானித்தாள்?

உன்னை நான் என்னென்னவோ சொல்லிவிட்டேன், மரியாதை தெரியாதவன் என்றும் நிந்தித்துவிட்டேன்! மன்னித்துவிடு, இராமா! உன்னுடைய குழந்தையின் மழலை, துஷ்டப் பேச்சு இல்லை என்று ஒதுக்கிவிடு, இராமா!

புன்னகை ததும்பும் உனது அழகிய திருமுகத்தை எனக்குக் காட்டு, என்னைக் காப்பாற்று, பத்ராசல இராமா! உன்னிடத்தில் பகையே யில்லாத இந்த இராமதாசனை அருள்பாலித்து ஆட்கொள்!

## 9. "அடுகுதாட்டி கதலனிய்யமு" (வராளி)

உன்னை நான் ஒரு அடி கூட நகர்விடமாட்டேன், என்னைக் காப்பதாக நீ உறுதி கூறும் வரை உன்னை விடமாட்டேன். புகல் தேடி அலைந்து அலைந்து களைத்துவிட்டேன். எல்லை கடந்தால் கொடுங் குற்றம் ஏதாவது கூட நான் புரிந்துவிடக் கூடும். உன்னை நான் ஒரு அடி கூட நகர விடமாட்டேன்!

நீ அமைதியாய் அமர்ந்திருக்கவும் விடமாட்டேன்; உனக்குச் சினம் வந்தால் கூட அஞ்சமாட்டேன்; இதை நீ நினைவில் வைத்துக்கொள். பிறகு என்ன யோசிக்கிறாய்? எனது இதயத் தாமரையில் உனது இரு தாள்களையும் கட்டிப் பிணைத்துவைப்பேன். உன்னை ஒரு அடி கூட நகர விடமாட்டேன்.

காலம் கடத்திக் கொண்டே போகிறாயா, உன்னை நான் எப்படித் தடுக்க முடியும்? நீயே ஒரே துணை என்று இருக்கிறவன் நான், பாவங்களிலிருந்து என்னைக் காப்பாற்று.. நீ இப்படியே விலகியிருந்தால் நான் எப்படிப் பொறுப்பேன்?

நம்பினோரைக் காப்பவன் என்றல்லவா எல்லோரும் உனை அழைக்கிறார்கள், உலகமனைத்தையும் ஆட்டுவிப்பவன் நீ தான் என்று உன்னையே தொழுகிறேன், என்னை ஆட்கொள்ளலாகாதா, பரம் பொருளே! உன்னை என்றென்றும் நான் விடமாட்டேன், ஐயனே!

அசுரர்களை அழித்தவனே, சீதை மணாளா, கமலக் கண்ணனே பக்தர்களின் பொக்கிஷமே! எனக்கு வீடுபேறு நல்க மாட்டாயா? மாட்டேன் என மறுத்தால், சாட்சிகளை அழைப்பேன், கடுமையாக நோன்பிருந்து உனது கடாட்சத்தினை நான் வெல்வேன் விடமாட்டேன்!

பத்ராசலத்தில் உறைபவனே, அரவணையில் யோக நித்திரை கொள்பவனே, பக்தர்களின் புகலிடமே! உன்னை நான் எப்பொழுதும் விட்டுவிலகேன்! விலகினேனாகில், பத்ராசல இராமதாசு எனாமல் எப்பெயரினையும் எனக்கு இட்டு நீ அழைப்பாயாக! ஒரு அடி கூட நகர உனை நான் விடேன்!

### 10. "ஏமைய்ய ராமா பிரம்மேந்திராதுலக்குனைனா" (காம்போதி)

பிரம்மன், இந்திரன் போன்ற தேவாதி தேவர்கள் கூட உனது மாட்சிமையை எப்படி மதிப்பிட முடியும்? சிவன் கூட அல்லவா உன்னுடைய புகழைப் பாடுகிறார்! எல்லா நலங்களுக்கும் நீயே உறைவிடம்: நீ நீலமேக சியாமள வண்ணன். ஓ இராமா, எனது அருமைத் தந்தை நீ! உன்னை யார் மதிப்பிடமுடியும்?

தசரதச் சக்ரவர்த்தி உன்னைத் தனது மகன் என்று கருதினார்: சுக்ரீவன் உன்னை நண்பன் என்று கருதினான்: நீ மனிதர்களுள் மாபெரும் வீரன் என்று வானரங்கள் நினைத்தன: பூவுலகின் அனைத்து அரசர்களும் உன்னைச் சக்ரவர்த்தி என்று துதித்தனர்: நீயே திக்கற்றவர்களின் பாதுகாவலன் என்பதை ஒருவரும் உணர்ந்தாரில்லை! உன்னை யார் மதிப்பிட முடியும்? பாண்டவர்கள் தோழன் என்றே உன்னை நினைத்தார்கள்: ஜாராசந்தனது ஆட்கள் பகைவனென்று உன்னை எண்ணினர்: பெருஞ் செல்வந்தன் என்று மட்டுமே உன்னைக் குசேலர் கருதினார்: எனவே கமலக் கண்ணனே, அவர்களால் உன்னைப் பூரணமாக அறிந்து கொள்ள முடியவில்லை. உன்னை யார் மதிப்பிடமுடியும்?

சாதாரண ஜனங்களோ உன்னைச் சாதாரண மானுடனாகவே பாவித்தனர்: யாதவர்களோ தங்கள் குலத்தலைவனென்று மட்டுமே உன்னை மதிப்பிட்டனர்: கோபியர்களுக்கோ நீ வெறும் காதலன்: கஜேந்திரனுக்கு மோட்சம் நல்கியவனே, பத்ராசலத்தில் உறைபவர்கள் கூட இராமதாசுவின் பரமாத்மா நீ என்பதனை அறிந்தாரில்லை! உன்னை யார் முழுமையாக மதிப்பிடமுடியும்?

### 11. "அந்தா ராம்மயம் - ஈ ஜகம்" (வராளி)

இராமனைப் பற்றிய எல்லாமே ஒளி மயம்தான்! இந்த உலகமே அவனால் தான் ஒளி மயமாயிருக்கிறது. உள்ளத்தின் உள்ளே ஆன்மாவாக இராமனே ஒளிர்கின்றான். பல்வேறு வடிவங்களிலும் விந்தைகளை யெல்லாம் செய்பவன் அவனே! அவனைப் பற்றிய அனைத்துமே ஒளி மயம்தான்.

சூரிய சந்திரர்களும் தேவதைகளும் உடுக்களும் உலகின் அனைத்துக் கடல்களும் உயிர்களும் எல்லாமே அவன் மயம்தான். அவனைப் பற்றிய எல்லாமே ஒளி மயந்தான்.
அண்டங்களை தோற்றுவிக்கின்ற அண்டங்களும். கருவாய்க் கிடந்து உயிர்த்துப் பல்கிப் பெருகுகிற அனைத்தும். அண்ட சராசரங்களும் அவற்றின் ஜீவ சக்தியும், ஆறுகளும் மலைகளும் வனாந்தரங்களும் எண்ணற்ற கோடி கோடி ஜீவராசிகளும் வேத வேதாந்தங்களும் தவமும் அறிவும் கல்வியும் எல்லாமே இராமன் தான்! அவனைப் பற்றிய எல்லாமே ஒளி மயந்தான்.
எட்டுத் திக்குகளும் ஆதிக்கு ஆதியான அந்த மலைப் பாம்பும் அஷ்ட வசுக்களும் உட்பகைகள் ஆறும், பத்ராசல ராமதாசுவின் இஷ்டங்களை யெல்லாம் பூர்த்தி செய்கிற அந்த தாரக மந்திரமும் ஸ்ரீ இராமனே! அவனைப் பற்றிய எல்லாமே ஒளி மயந்தான்.

### *12. "ராமஜோகி மந்து கொனரே" (கமாஸ்)*

ஓ ஆன்மீகத்தை அறியாத பாமர ஜனங்களே, இராம பக்தர்கள் விற்பனை செய்து வரும் மருந்துகளை ஏன் நீங்கள் வாங்கிப் பயன்படுத்தக் கூடாது?

அம்மருந்துகள் ஆசைகளையும் ஆத்திரத்தையும் கோபத்தையும் விரட்டக் கூடியவை ஆயிற்றே! அவற்றை ஏன் நீங்கள் வாங்கிப் பயன் படுத்தக் கூடாது? இராம் பக்தர்களிடம் அவற்றை வாங்கி மிக்க ருசித்து நீங்கள் அருந்தலாமே! அவற்றைப் பயன்படுத்துங்கள்.

பல பிறவிகளிலும் நாம் சம்பாதித்த, இருண்ட மாமலைகள் போலக் குவிந்து கிடக்கும் பாவச் சுமைகளைப் போக்கும் மருந்துகள் அவை! உண்மையான பக்தர்களைச் சதா ஸ்ரீ இராமனது திருநாமத்தை உச்சரிக்கச் செய்யும் மருந்துகளும் அவையே. அவற்றையே பயன்படுத்துங்கள்.

பத்ராசலத்தில் பக்தர்களுக்கு முக்தியினை அளிக்க வல்ல சாதனமும் அந்த மருந்தே. ஸ்ரீ இராமன் மீது ஆழ்ந்த பக்தி கொண்ட இராமதாசன் போற்றும் மருந்தும் அதுவே! அம்மருந்தினையே பயன்படுத்துங்கள்!

# நூற் பட்டியல்

## *தெலுங்கில்*


1. ஸ்ரீ பத்ராசல ராமதாசு சரித்ரமு : (சிங்காரதாசு பரப்பிய யக்ஷகானம் (ஹரிகதை) வாவில்ல ராமசுவாமி சாஸ்த்ருலு & சன்ஸ், சென்னை, 1951.

2. ஆந்த்ர வாக்கேயகார சரித்ரமு: சங்கீத கர்த்தாக்களின் வரலாறும் இசையின் வளர்ச்சியும் பற்றியது. ஆசிரியர் B. ரஜனிகாந்த ராவ். விசாலாந்த்ரா பப்ளிஷிங் ஹவுஸ், விஜயவாடா, 1958

3. ஸ்ரீ மகர்பக்த விஜயமு: ஸ்ரீபாத சுப்ரமண்ய சாஸ்த்ரி, வாவில்ல ராமசுவாமி சாஸ்த்ருலு & சன்ஸ், சென்னை, 1949.

4. **The Story of Akkanna and Madanna:** வேதம் வெங்கடராய சாஸ்த்ரி, வேதம் வெங்கடராய சாஸ்த்ரி & பிரதர்ஸ், ஜி.டி. சென்னை, 1949.

5. சமக்ராந்த்ர சாகித்யமு (நவபுலயுகமு) ஆருத்ரா. ஆந்திரப் பிரதேச சாகித்திய அகாதமி, 1966.

6. ஷதக கவுல சரித்ரமு: வங்கூரி சுப்பாராவ், ஆந்த்ரப் பத்ரிகா பப்ளிகேஷன்ஸ், சென்னை, 1924.

7. ஷதக ஷம்புதம் (தாசரதி ஷதகம்): பதிப்பித்தவர்: நிடதவோலு வெங்கட் ராவ். ஆ.பி. சாகித்திய அகாதமி. ஐதராபாத். 1966

8. தேவாலய சரித்ரமு: J.V. ராதாகிருஷ்ணையா & செஞ்சு ராமையா, சுந்தர பிரச்சுராநலு, விஜயவாடா, 1970.

| | | |
|---|---|---|
| 9. | **ராமதாசு கீர்த்தனலு:** | மஞ்சால ஜகன்னாத ராவ் (பதிப்பாசிரியர்) ஆந்திரப் பிரதேச சங்கீத நாடக அகாடமி. ஐதராபாத். 1975. |
| 10. | **துவாதச சூரி சரித்ரா: (12 ஆழ்வார்கள்)** | K.T.L நரசிம்ஹாச்சார்யுலு, கோத கிரந்தமாலா, கிருஷ்ணா மாவட்டம், 1957 |
| 11. | **குதுப் ஷாகி சுல்தானுலு:** | B. ராமராஜு (பதிப்பாசிரியர்), இதர அத்பியாத் - ஈ - உருது. ஐதராபாத், 1962. |
| 12. | **க்ஷேத்ரய்யா பதமுலு:** | விஸ்ஸா அப்பாராவ் (கம்பெனி & பதிப்பாசிரியர்), ஆந்திர கானகலா பரிஷத், ராஜமுந்திரி, 1950 |
| 13. | **சாரங்கபாணி பதமுலு:** | வெஸ்ட்வார்ட் & கம்பெனி, சென்னை, 1956. |
| 14. | **அத்யாத்ம ராமாயண கீர்த்தனுலு:** | முனிபல்லே சுப்ரமண்ய கவி, M.J. ராவ் (பதிப்பாசிரியர்கள்), ஆந்திர கானகலா பரிஷத், ராஜமுந்திரி, 1962 |
| 15. | **யாத்ர மார்க்கதர்சி** (பாகம் 1) | ராகம் வெங்கடேஸ்வரலு, சீதாராமநாம சங்கீர்த்தன சங்கம் குண்டூர், 1970. |
| 16. | **தியாகராஜ கீர்த்தனுலு:** | கல்லூரி வீரபத்ர சாஸ்திரி (தொகுத்தவர்), விஸ்ஸா அப்பாராவ் (பதிப்பித்தவர்), ஆ.கா. பரிஷத், ர்ராஜமுந்திரி, 1948. |
| 17. | **விக்ஞான சர்வஸ்வமு தேசமு சரித்ரா:** (பாகம் 1) | M. சோமசேகர சர்மா, தெலுகு பாஷா சமிதி, சென்னை, 1983. |
| 18. | **விக்ஞான சர்வஸ்வமு லலிதகாலலு:** | C. சேஷகிரி ராவ், தெலுகு பாஷா சமிதி, ஐதராபாத், 1979. |
| 19. | **Dissertation on Ramadasu (M.Phil)** | தசரதலு பாலய்யா, உஸ்மானியா பல்கலைச் கழகம், ஐதராபாத், 1984. |

20. **Dissertation on Music & Lyrics of Ramadasu:** T.V. நாகரஜ்சனி, மத்தியப் பல்கலைக் கழகம், ஐதராபாத், 1984.

***இந்தியில்***

1. ஹிந்தி சாகித்ய கா சுபோத் இதிஹாஸ் — குலாப் ராய், சாகித்ய ரத்னா பந்தர், ஆக்ரா, 1951

***சமஸ்கிருதத்தில்***

சாரதா திலகம் — லக்ஷ்மண தேசிகேந்திரா (ராகவ பட்டரின் " பதார்த்த தர்சனா" உரையுடன்), மகாமகோபாத்யாய முகுந்த ராஜஹ பக்ஷி (பதிப்பாசிரியர்), சௌகாம்பா சான்ஸ்கிரிட் சீரீஸ், வாரணாசி, 1963.

***ஆங்கிலத்தில்***

1. **Telugu Literature in Qutub Shahi Period:** E. Vassumati, Abul Kalam Azad Oriental Institute, Hyderabad, 1964.
2. **The Illustrious Prime Minister Madanna:** K.V. Bhupal Rao, Savitri Sadanam, Linganpalli, Hyderabad, 1984.
3. **Indian Philosophy: (Vols. I & II)** S. Radhakrishnan, Oxford University Press, London, 1948.
4. **Sufis, Mystics and Yogis of India** Bankey Behari K. M. Munshi & R. R. Diwakar (Ed.) Bharatiya Vidya Bhavan, Bombay, 1962.
5. **Kshetrayya:** B. Rajanikanta Rao, Sahitya Akademi, New Delhi, 1981.

இராமதாசு பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த தெலுங்கு இசைமேதை. பரம பாகவதர் எனக் கொண்டாடப்பட்ட இவரது கீர்த்தனைகள் தியாகராஜர், தூமு நரசிம்மதாசு, வரததாசு போன்ற பல சங்கீத கர்த்தாக்களுக்கும் தூண்டுகோலாய் அமைந்தன.

ஸ்ரீ இராமரது புகழினையும் பெருமைகளையும் இராமதாசர் பாடினார். கீர்த்தனைகள் வாயிலாக அவர் ஆண்டவனுக்குச் செய்த வேண்டுதல்கள் அற்புதமான இசை வளத்தையும், அதேசமயம் பாரம்பரியமான எளிய அமைப்பையும் கொண்டவை. அன்றாட வாழ்க்கையின் இன்னல்களைப் பற்றிப் பாடும் இராமதாசரது கீர்த்தனங்கள் இறைவனுக்கு விடுக்கப்பட்ட விண்ணப்பங்கள்; அவனைப் போற்றி செய்து, அவனது பல்வேறு திருநாமங்களையும் கல்யாண குணங்களையும் திருவவதாரங்களையும் அருளிச் செயல்களையும் வாயாரப் புகழ்கின்றன அவை. அநாதரவான ஏழை பக்தன் ஒருவன், அளப்பரியதும் அசைக்க வொண்ணாததுமான நிறை பக்தியுடன் பரம்பொருளோடு உரையாடுகின்ற வகையில் அவை அமைந்துள்ளன.

பி. ரஜனிகாந்த ராவ் (பிறப்பு : 1920) ஒரு கவி, நாடகாசிரியர், இசைவாணர். இவர் தெலுங்கில் "ஆந்திர வாக்கேயகார சரித்ரமு" என்ற ஆய்வு நூலுக்காக 1961 இல் சாகித்திய அக்காதெமி விருது பெற்றுள்ளார்.

இந்நூலைத் தமிழாக்கம் செய்துள்ள இர. ஆலாலசுந்தரம், தமிழ் நாட்டில் பல கல்லூரிகளில் முதல்வராக இருந்து ஓய்வு பெற்றவர். ஆங்கிலத்திலும், தமிழிலும் பல நூல்கள் எழுதியுள்ளார்.

Bhadrachalam Ramadasar (TAMIL)
ISBN 81 - 260 - 0826 - 1

Rs. 25/-